# அருள்மிகு திருத்தளிநாதர் ஆலய திருக்குடமுழுக்கு

# விழா சிறப்பு மலர்

நாள்: 20-06-2011 திங்கட்கிழமை






வெளியீடு: வான்மதி பதிப்பகம் 7373303357

790

# ஆசிரியர் உரை



அன்பர்களுக்கு இனிய வணக்கம்.

வான்மதி பதிப்பகத்தின் சார்பாக திருப்புத்தூர் திருத்தளிநாதர் ஆலயத் திருக்குட நன்னீராட்டு விழாச் சிறப்புமலரை தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்களது திருக்கரங்களால் வெளியிடுவதில் மிகுந்த மகிழ்ச்சியடைகிறோம்.

மிகத் தொன்மை வாய்ந்ததும், வரலாற்றுச் சிறப்புடையதுமாக விளங்கும் திருத்தளிநாதர் ஆலயத்தின் நன்னீராட்டு விழா 19 ஆண்டுகளுக்குப் பிறகு இன்று நடைபெறுகிறது.

இந்த விழாவில் பங்கேற்று இறைவன் அருள்பெற வருகைதந்துள்ள அனைத்து மக்களுக்கும், தாங்கள் விரும்பியபடி நல்வாழ்க்கையும், குறையாத வளத்தையும், நீண்ட ஆயுளையும் இறைவன் தங்களுக்கு வழங்க இறைவனைப் பிரார்த்தித்து இம்மலரை வெளியிடுகிறோம்.

ஓர் ஆலயம் கட்டுவது என்பதும், அதைப் பராமரிப்பது என்பதும், குடமுழுக்குச் (நன்னீராட்டு விழா) செய்வதும் எளிய காரியமல்ல.

குடமுழுக்கு என்பது ஆவர்த்தம், அனாவர்த்தம், புனராவர்த்தம், அந்தரிதம் என்று நான்கு வகைப்படும். இப்படியான கும்பாபிஷேகத்திற்கு 1 குண்டம், 5 குண்டம், 9 குண்டம் 17 குண்டம், 25 குண்டம், 33 குண்டங்களை அமைத்து யாகங்கள் போட்டு கும்பாபிஷேகம் (நன்னீராட்டு விழா) நடத்துவார்கள். இன்று நாம் அருள்மிகு திருத்தளிநாதர் ஆலயத்திற்குச் செய்வது புனராவர்த்தமாகும். அதாவது, பழுது நீக்கி புதுப்பித்து அஷ்டப்பந்தனம் சார்த்தி பிரதிஷ்டை செய்வது.

இறையருள்மீது நம்பிக்கை கொள்ளுங்கள்; வாழ்வில் எல்லாத் தடைகளும் தடயம் தெரியாமல் அழிந்து போகும்; இன்னல்களும் இன்பங்களாகும். தன்னம்பிக்கை கொள்ளுங்கள்; உங்கள் வாழ்வில் அது இன்னும் ஆக்கப்பூர்வமான அதிசயங்களை நிகழ்த்தும். உங்களை இவ்வுலகிற்கு சாதனையாளர் என அடையாளம் காட்டும். அந்த நம்பிக்கையை உங்களுக்கு திருப்புத்தூர் திருத்தளிநாதர் –யோக பைரவர் அருள்வார்.

இம்மலர் சிறப்புடன் வெளிவர விளம்பரங்கள் தந்து ஊக்கமளித்த வணிக நிறுவனங்களுக்கும், வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்த தவத்திரு. **குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்** அவர்களுக்கும், பிள்ளையார்பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் திருக்கோயிலின் தலைமைக் குருக்கள், 'சிவநெறிச் செம்மல்' டாக்டர் **கே. பிச்சைக் குருக்கள்,** அவர்களுக்கும், அரசு டவுன் காஜி, தலைமை இமாம், மவ்லவி அல்ஹாஜ், கே.எம். முஹம்மது பாரூக் ஆலிம், த.சு.லு.தி. ஆரோக்கியநாதர் ஆலய சபை குரு. ம. ஜான்சன் அவர்களுக்கும், இம்மலர் வெளிவர பெரிதும் உதவிய அனைத்து ஆன்றோர்களுக்கும் எங்களது நன்றியைக் காணிக்கையாக்குகிறோம்!

ஆசிரியர்,
**ம. முத்துக்குமரன்**
**Cell: 7373303357**

ஆசிரியர் குழு: **கவிஞர். சிவபாரதி**, **அரும்பு லேனா**

# திருத்தளியான் காண் அவன் என் சிந்தையானே!

## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



தென்பாண்டி நாடு செந்தமிழ் வளர்த்த திருநாடு: சிவநெறி கண்ட அருள்நாடு. சிவம் என்னும் செம்பொருளையே தம் பொருளாக் கொண்டு ஞானச் சுடர் பரப்பிய நாடு. இத்தகு தென்பாண்டி நாட்டில் தேவாரம் பெற்ற 14 திருத்தலங்களில் திருஞான சம்பந்த சுவாமிகளாலும், திருநாவுக்கரசு சுவாமிகளாலும் பாடப்பெற்ற திருத்தலம் திருப்புத்தூர்த் திருத்தலம். இங்கு எழுந்தருளியுள்ள திருத்தளிநாதர் அருளாற்றல் மிகுந்தவர்.

காசிக்கு அதிகமாம் ஒரு முழம், காரணம் மிகுந்த புத்தூர்
கங்கைக்கு ஒரு முழம் அதிகமாம் கமல சீதளி தடாகம்
என்பது ஒருநாட்டுப் பாடல் வரிகள்.

திருப்புத்தூர் ஒரு காலத்தில் கொன்றை வனமாக இருந்ததால் இத்தலம் கொன்றைவனம் என்றும் சிறப்புப் பெயர் பெற்றது. திருத்தளி என்ற கோயில் பெயரே இங்குள்ள இறைவனுக்கும், தீர்த்தத்திற்கும் பெயராக விளங்குவது ஒரு சிறப்பு. இத்திருத்தல விருட்சம் கொன்றை மரமாகும். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் காலத்திலேயே இத்திருக்கோயில் சிறப்புற்று இருந்தது என்றும் தெரிகிறது. திருஞான சம்பந்தர் தேவாரம், "ஓங்கு கோயில்" என்றும், திருநாவுக்கரசர் திருத்தாண்டகம் "தோராரும் நெடுவீதி திருப்புத்தூர்" என்றும் போற்றுகின்றன.

இத்தகு சிறப்பு வாய்ந்த திருக்கோயிலில் அன்னை சிவகாமி அம்மை தனிக்கோயில் கொண்டு எழுந்தருளி இருந்து மக்களுக்கு அருளை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறாள். இத்திருக்கோயில் வளாகத்துக்குள் யோக பைரவர் மேற்கு நோக்கிக் கோயில் கொண்டுள்ளார். அருள்தரு யோக பைரவர் கேட்ட வரம் தரும் அற்புதத் தெய்வம். திருப்புத்தூர் மக்கள் இந்தத் திருத்தளிநாதர் கோயிலை "வைரவன் கோயில்" என்று கூறுவது ஒன்றே இம்மூர்த்தியின் அருளாற்றலைப் புரிந்து கொள்வதற்குப் போதிய சான்றாகும். இவ்வாறு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று மூவகையாலும் சிறப்புற்று விளங்குவது இத்திருப்புத்தூர் திருத்தலம்.

திருஞான சம்பந்தர் மதுரைக்குச் சென்று பாண்டியன் நெடுமாறனின் வெப்பு நோயைத் தீர்த்து, சமணர்களை வென்று மதுரையில் இருந்து திரும்பும்போது திருப்புத்தூர்த் திருத்தலத்திற்கு வந்து பாடி வழிபட்டுச் சில நாட்கள் தங்கியிருந்தார் என்று பெரியபுராணம் பேசுகிறது. திருநாவுக்கரசு சுவாமிகள் மதுரைக்குச் செல்லும் வழியில் திருப்புத்தூர் திருத்தளிநாதரை

நெஞ்சுருகப் பாடி மகிழ்ந்துள்ளார். சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேரமான் பெருமாள் நாயனாரும் இத்திருத்தலத்திற்கு வருகைபுரிந்து வழிபட்டனர் என்பது வரலாறு. இத்தகு அருளாளர்கள் வழிபட்டதால் திருத்தளிநாதர் அருளாற்றல் மிக்கவராக விளங்கிக் கொண்டிருக்கிறார்.

இத்திருக்கோயில் கி.பி. 7 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது. முற்கால பாண்டியர்களாலும், பிற்காலப் பாண்டியர்களாலும் விஜய நகர மன்னர்களாலும் சிற்றரசர்களாலும், மருதுசகோதரர்களாலும் திருப்பணி செய்யப்பட்ட பெருமையுடையது இத்திருக்கோயில்.

திருஞான சம்பந்த சுவாமிகளின் திருவாக்காகிய ஓங்குகோயில் என்ற அருள்மொழியை மகுடமாகக் கொண்டு மறைஞான சம்பந்தர் என்ற அருளாளர் கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் இத்திருத்தலத்திற்குத் தலபுராணம் பாடியுள்ளார் என்று இத்திருக்கோயிலில் உள்ள கல்வெட்டு அறிவிக்கிறது.

காரைக்குடி இராம. சொ. சொக்கலிங்கம் செட்டியார் என்பவரால் 19 ஆம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில் திருப்புத்தூர்ப் புராணம் இயற்றப்பட்டுள்ளது.

இவ்வாறெல்லாம் திருவருள் செழிப்புடைய இத்திருத்தலத் திருக்கோயில் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் மகா சந்நிதானங்களைப் பரம்பரை அறங்காவலர்களாக் கொண்டு திகழ்ந்து வருகிறது. அருள்நெறித் தந்தை தவத்திரு. குன்றக்குடி அடிகளார் பெருமான் அருளாட்சிக் காலத்தில் இத்திருக்கோயில் திருப்பணிகள் முழுவதும் சிறப்பாக நிறைவேற்றி புதிய இராசகோபுரம் கட்டி 24-08-1992 இல் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. இப்போது திருக்கோயில் திருப்பணிகள் முழுவதும் சிறப்பாக நிறைவேற்றி 20-06-2011 அன்று திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடைபெறவிருக்கிறது. திருக்குட நீராட்டுப் பெருவிழாக் கண்டு திருவருள் பொலிவுடன் வீற்றிருந்தருளும் அப்பனாகிய **திருத்தளிநாதரையும், அன்னை சிவகாமி அம்மையையும்,** அருள்தரு **யோக பைரவ சுவாமியையும்** எல்லோரும் வழிபட்டு உய்தி பெறுவோமாக! திருத்தளியான்காண் அவன் என் சிந்தையானே!

இத்திருக்குட நீராட்டு விழாவை முன்னிட்டு வான்மதி பதிப்பகம் திருக்குட முழுக்கு விழாச் சிறப்பு மலர் வெளியிட இருப்பது நமக்கு மிக்க மகிழ்வளிக்கிறது. இந்த மலரில் திருப்புத்தூர்த் திருத்தளிநாதர் திருக்கோயில் பற்றிய செய்திகள் பல இடம்பெற்றுள்ளன. இச்செய்திகள் அன்பர்களுக்குப் பயனுடையவாகும். இச்செய்திகளைச் சேகரித்துச் சிறப்பாக மலர் வெளியிடும் மலர்க் குழுவினர்க்கும், வான்மதி பதிப்பகத்தார்க்கும் நமது உளம் நிறைந்த பாராட்டுகள். வாழ்த்துகள்!



## வாழ்த்துரை

'சிவநெறிச் செம்மல்'
**டாக்டர் கே. பிச்சைக் குருக்கள்,**
தலைமைக் குருக்கள்,
ஸ்ரீ கற்பக விநாயகர் திருக்கோயில்,
பிள்ளையார்பட்டி

உலகம் முழுவதும் பல்வேறு வழிபாட்டு நெறிகள் உயிர்களின் உய்தி வேண்டி தோன்றின. இந்தியத் திருநாட்டில் இமயம் முதல் குமரி வரையும் இலங்கை மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளிலும், சிவ வழிபாட்டு நெறி பன்னெடுங்காலமாக வளர்ந்து வழிகாட்டி வருவதைக் காண முடிகிறது. தற்போது ஐரோப்பா, அமெரிக்கா போன்ற மேற்கத்திய நாடுகளிலும் தொழில் நிமித்தம் சென்ற நம்மவர்கள் சிவ நெறியை பரப்பி வருகின்றனர்.

இவற்றிற்கெல்லாம் மூல காரணம் நமது வழிகாட்டும் வேத சிவாகம திருமுறைகளின் உயிரோட்டம்தான் என்பதை உணர முடிகிறது. பாண்டிய நாட்டுத் தலங்களில் சிறப்புற்று விளங்கும் திருப்புத்தூர் தலத்தில் இரண்டு முறை கும்பாபிஷேகப் பணி செய்யும் வாய்ப்பை இறைவன் நல்கியதை எண்ணி மகிழ்கிறோம். குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின் ஐந்து கோவில்களில் ஒரு சிறப்பு மிக்க தலம். ஸ்ரீ சிவகாமி உடனுறை ஸ்ரீ திருத்தளிநாதர் மற்றும் ஸ்ரீ யோக பைரவர் அருளால் அனைவரும் நலம் பெற பிரார்த்திப்பதோடு, இம்மலரை சிறப்புற வெளியிட்டிருக்கும் வான்மதி பதிப்பகத்திற்கு எனது வாழ்த்துகள்!

என்றும் அன்புடன்,

திருப்புத்தூர்.
16-06-2011

K. Pitchai Kurukkal

**டாக்டர் கே. பிச்சைக் குருக்கள்**

## வாழ்த்துரை



மவ்லவி அல்ஹாஜ்,
**கே.எம். முஹம்மது பாரூக் ஆலிம்,**
சிவகங்கை மாவட்ட அரசு டவுன் காஜி,
தலைமை இமாம், மஸ்ஜித் அல்-ஸஹாபா,
திருப்புத்தூர்.

எல்லாப் புகழும் ஏக இறைவனுக்கே!

நம்மையும், நாம் வாழும் இந்த உலகத்தையும், அதில் உள்ள அனைத்தையும் படைத்தாளும் எல்லாம் வல்ல ஏக இறைவன் தனது பிரதிநிதிகளாகிய நம்மை - மனிதர்களைத் தன்மை வணங்குவதற்காகவே படைத்துள்ளான்.

இறைவணக்கம்தான் மனிதனுக்கு இதய அமைதி, இன்பமான வாழ்வு, இரு உலக வெற்றி ஆகிய அனைத்தையும் பெற்றுத் தரத் தக்கது என்பது ஆன்றோரின் வாக்கு.

மனித நேயம் கொண்ட இம்மாநகரில் வாழும் நாமும் முழு உலக மக்களும் இறைவனின் நேர் வழியையும், இதர அனைத்து வளங்களையும் இரு உலக வெற்றியையும் பெற்றவர்களாக வாழ்ந்திட இந்நாளில் இதய சுத்தியுடன் இறைவனிடம் பிரார்த்தனை செய்கிறேன்.

இம்மலர் அழகுற வெளியிட்டுள்ள வான்மதி பதிப்பக உரிமையாளர் அன்புத் தம்பி வான்மதி முத்துக்குமரன் அவர்களுக்கு எனது வாழ்த்துகள்.

வாழ்வோம் இறையருளுடன் என்றும்.

நேசமுடன்

திருப்புத்தூர்.
16-06-2011

மவ்லவி அல்ஹாஜ்,
**கே.எம். முஹம்மது பாரூக் ஆலிம்,**

**அருட்திரு. சாமு இதயன்,**
'தேவஞான இசைவாணர்'
பங்குத் தந்தை,
அமல அன்னை ஆலயம், திருப்புத்தூர்.



## ஆன்மிகச் சரித்திரமாய்ச் செழிக்க வாழ்த்துகிறேன்!

எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனை ஒரு வடிவில் தரிசிக்கும் புண்ணிய தலம் திருக்கோவில்.

காலங்கள் பல கடந்தாலும் கம்பீரமாய் எழுந்து நிற்கும் ஆலயக் கோபுரத்தின் அடித்தளத்தில் மூலவனாய் விளங்கும் பரம்பொருளை மக்கள் மனமுருகி வழிபடும் அருட்தலம் திருக்கோவில்.

அதனால்தான் ஆலயம் தொழுதல் சாலமும் நன்று – என அருளிய சான்றோர்கள் காண்கின்ற திசையெல்லாம் கவின்மிகு கோவில்களைக் கட்டி எழுப்பினார்கள்.

அந்த ஆன்றோர்களின் அடிச்சுவட்டில் எழும்பி ஆண்டுகள் பல கண்ட வரலாற்றுப் பெருமையோடு திருப்புத்தூர் நகரின் மத்தியில் அமைந்த தனித்துவச் சிறப்போடு திகழும் அருள்தரு திருத்தளிநாதர் சுவாமி திருக்கோவில் அருள்தரு யோக பைரவ திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு பெருவிழா காண்பது கண்டு சகோதர வாஞ்சையோடு மகிழ்ந்து நிற்கின்றேன்

தூணிலும், துரும்பிலும், கல்லிலும், முள்ளிலும், காண்கின்ற ஒவ்வொரு பொருளிலும் கலந்திருப்பவன்தானே இறைவன்.

"எல்லாவற்றிலும் மறைந்திருக்கும் இறைவனை எல்லா இடத்திலும் வணங்கி மகிழலாமே! ஏன் திருக்கோவில் சென்றுதான் வழிபட வேண்டும்?" என்று கிருபானந்தவாரியாரிடம் ஒருவர் கேட்டாராம்.

அதற்கு வாரியார் சுவாமிகள் தந்த பதில் அறிவியலோடு கலந்த ஆன்மிக உண்மையாக இன்றும் நம் காதில் எதிரொலித்துக் கொண்டே இருக்கின்றது.

சூரியன் எல்லா இடங்களிலும் தனது ஒளியைப் பிரதிபலித்துக் கொண்டிருக்கிறது. அந்த சூரிய ஒளியை குவி ஆடி என்று சொல்லப்படுகின்ற லென்ஸின் உதவி கொண்டு ஓரிடத்தில் மையம் கொள்ளச் செய்கின்றபோது அங்கு குவியும் அந்த சூரிய ஒளி ஒரு காகிதத்தையே எரிக்கின்ற சக்திமிகு பிழம்பாக மாறுகின்றது.

அத்தகைய சூரிய ஒளியைப் போன்றதுதான் திருக்கோயில் இறைவன் எட்டுத் திக்கும் நிறைந்தவனாகத் திகழ்ந்தாலும் அவனை நிலை கொள்ளச் செய்யும் சக்திமிகு ஓர் அருள் மையமாகச் சிறப்பது திருக்கோவில்.

அந்தத் திருக்கோவிலில் சென்று வழிபடும்போது இறைவனது ஆற்றல்மிகு அருளொளி எளிதில் வரமாக நமக்குக் கிடைக்கின்றது. இதுதான் திருக்கோவில் எழுப்பப்படுவதற்கான அறிவியல் உண்மை.

இந்த உண்மையைத்தான் எல்லா சமயத்து ஆன்மிகத் தலங்களும் பொதுவான தத்துவார்த்தமாக ஏற்றுக் கொண்டு செயல்படுகின்றன.

அந்த வகையில் பாரம்பரிய பெருமைமிகு குன்றக்குடி ஆதீனத்தின் அடியொற்றி ஆன்மிகப் பணிபுரியும் அருட்தலமாகச் சிறக்கும் இந்தத் திருக் கோவில்கள் திருக்குட நன்னீராட்டுத் திருவிழாவைக் கொண்டாடுவது திருப்புத்தூர் நகரில் வாழும் ஒவ்வொருவரும் பெருமை கொள்ளக்கூடிய ஒன்றாகும்.

இந்து சமயத் துறவியாக இருந்தாலும், சமயம், இனம் என்ற எல்லைகளையெல்லாம் கடந்து எல்லோராலும் மதித்து நேசித்துப் போற்றப்படும் – புகழப்படும் வணக்கத்திற்குரிய குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் தலைமையில் திருப்பணிகள் நடைபெற்று அவரது முயற்சியில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா காண்கின்றன இத்திருக்கோயில்கள் என்பது மேலும் பெருமைக்குரிய ஒன்றாகும்.

குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் பெருந்தொண்டில் இப்பெருவிழாவைக் காணும் இத்திருக்கோவில்கள் மென்மேலும் பொலிவுகள் பல கண்டு சிறக்கவும்

இத்திருக்கோயில்களின் வழியாக மனித மனங்கள் ஆன்மிக நெறியிலும், பக்திமிகு வாழ்விலும், மனித நேய சமய நல்லிணக்க வழியிலும் கனிந்து செழிக்கவும், இதயத்தின் அடித்தளத்தில் பூத்த வாழ்த்து மலரை உள நெகிழ்வோடு சமர்ப்பித்து மகிழ்கிறேன்.

அருட்திரு. சாமு இதயன்
பங்குத் தந்தை,
அமல அன்னை ஆலயம்

திருப்புத்தூர்.
17-06-2011



**மறைதிரு. ம. ஜான்சன்,**
சபைகுரு,
த.சு.லு.தி. ஆரோக்கியநாதர் ஆலயம்,
திருப்புத்தூர்,
சிவகங்கை.

## வாழ்த்துரை

சிவகங்கைச் சீமையிலே திருப்புத்தூர் மண்ணிலே அமைந்துள்ள திருத்தளிநாதர் ஆலயம் காலத்தால் தொன்மை பெற்று மன்னர்கள் பல கண்டு மாண்புமிகு. மக்கள் பலர் வணங்க இன்றுவரை தம் பற்றினை இறையடியவர்களின் இதயத்தில் வளர்த்து பெருமை பெற்று வரும் இவ்வாலயம் வளர வாழ்த்துவதுடன் இதன் பக்தர்கள் அனைவருக்கும் இதயம் கனிந்த பாராட்டுகளையும், இம்மலரை சிறப்புற வெளியிடும் வான்மதி பதிப்பகத்திற்கும் இதயம் கனிந்த பாராட்டுகளை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருப்புத்தூர்
14-06-2011

என்றும் அன்புடன்
M. Johnson
மறைதிரு. எம். ஜான்சன்

# திருக்கற்றளி



திருப்புத்தூர் – சிவகாம சுந்தரி உடனாய திருத்தளீசன், யோக பைரவர் ஆலயம் காலத்தின் சக்கரங்களைப் பின்னுக்குத் தள்ளி வரலாற்று நோக்கோடு நாம் காணும் போது சுமார் கி.மு. 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்ற தொன்மை நமக்குப் புலனாகிறது.

கால நீட்சியில் கரையாமாரம், கர்ண பரம்பரையாக நிலவிவரும் செவிவழிச் செய்திகளும், புராண, இதிகாசக் குறிப்புகளும், இலக்கிய கல்வெட்டுச் சான்றுகளும் இந்தத் தொன்மைக்கு உறுதி கூறுகின்றன.

இந்தப் பிரபஞ்சத்தின் தோற்றமும் ஒழுக்கமும், காத்தல், மறைத்தல், அருளால் என்ற ஐம்பெரும் பணியினை புரிந்து அமரர் தொழுதேத்தும் புகழ் தக்கோன் கயிலையங்கிரிவாசன் தான் மிகவும் விரும்பி, மகிழ்ந்து சுயம்புவாக எழுந்தருளியிருக்கும் புண்ணிய பூமி திருப்புத்தூர் தலம்.

பிரணவத்தில் இருந்தே அனைத்து உயிர்களின் தோற்றமும், அந்தப் பிரணவமாகிய ஓம்காரம் ஐஸ்வர்யம் நிறைந்ததும், லட்சுமி வாசம் செய்யும் பதியான இந்தத் தலத்திலே ஓம்காரமான சர்வேஸ்வரன் உலகில் முதன்முதலில் கொன்றையின் வடிவமாக அவதாரம் எடுத்து இங்கு அருள்பாலிக்கிறார். கலியுகத்தில் கிடைத்தற்கரிய தலம் இது. நித்தமும் தேவர்கள் வந்து வழிபடும் ஸ்தலம். இக்கொன்றை மரத்தை தரிசனம் செய்தால் ஓம்காரத்தை அதன் ரூபத்தை அதன் தத்துவத்தை உணரமுடியும்.

**கௌரித் தாண்டவம்**

திரிபுர சம்ஹாரத்தின் வெற்றிக்களிப்பில் ஆடிய தாண்டவத்தை உமையவள் மீண்டும் காண உளம் கொண்டாள். அவளின் உளக் கருத்தை அறிந்தே எம்பிரான் – திருப்புத்தூர் கொன்றைவனம் எழுந்தருளி அங்கே யாம் திருக்கூத்து நிகழ்த்துவோம் என்று திருவாய் மலர்ந்தருளினார்.

ஏழுவகைத் தாண்டவங்களில் இது காத்தலுக்குரியது. இதை மகாலெட்சுமியும் காண விரும்பியதால் மீண்டும் இத்தலத்தில் எழுந்தருளிக் காட்டுகிறார். எனவே இது லெட்சுமி தாண்டவம் என்றும் வழங்கப்படுகிறது.

**ஸ்ரீ கொன்றைவன யோக நாராயணப் பெருமாள்**

பிருகு முனிவரால் ஏற்பட்ட சாபம் நீங்க அருட்பெரும் கருணைக்



கடலான திருத்தளிநாதனை யோக நிலையில் இருந்து மகாவிஷ்ணு வழிபட்டதால் யோக நாராயணப் பெருமாளாக அருள் தருகிறார். நான்கு கரங்கள், சீதேவி, பூதேவி சமேதராய் ஜடாமகுடம் தரித்து முனிவர்கள் புடைசூழ அமைந்த மிகப் பழமையான சிற்பம் என்கின்றனர் ஆய்வாளர்கள்.

**கார்கோடன், வாசுகி**

சர்ப்பங்களில் நான் வாசுகி என்பான் கீதையிலே கண்ணன். அந்த வாசுகியும், கார்கோடனும் தன் சாபம் நீங்க வழிபட்ட தலம் இது. இங்கு திருநாகேஸ்வரன் சந்நிதியில் வழிபட்டால் சர்ப்ப தோசம் நீங்கும் எனவும் கூறப்படுகிறது.


வால்மீகி தல விருட்சம் கொன்றை மரம்

**இத்தலத்தை வழிபட்ட நாயன்மார்கள்**

**தொண்டர் தம் பெருமை சொல்லும் சொல்லும் பெரிதே** என்பாள் ஔவை. இங்ஙனம் தொண்டு செய்த அடியார்கள்



ஸ்ரீ கொன்றைவன யோக நாராயணப் பெருமாள்

திருஞான சம்பந்தப் பெருமான்
திருநாவுக்கரசர்
சுந்தரமூர்த்தி சுவாமிகள்
மாணிக்கவாசகர்
நின்ற சீர் நெடுமாற நாயனார்
மங்கையர்க்கரசியார்
குலச்சிறை நாயனார்
சேரமான் பெருமாள் நாயனார்

இவர்களில் ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் பாடிய பதிகங்களே நமக்குக் கிடைத்திருக்கின்றன. ஏனையோரது பதிகங்கள் காலக் கரையான்களுக்கு இரையாகி இருக்கலாம்.

**திருமடங்கள்**

திருஞான சம்பந்தர் திருமடம், திருத்தொண்டத்தொகையான் திருமடம் திருச்சிற்றம்பலமுடையான் திருமடம் ஆகிய மடங்கள் மூலப்பரிடை, மகாசபை, பெருங்குறி என கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகின்றன. இதன் மூலம் உழவாரப் பணி, தொண்டு நடைபெற்றதாக அறிய முடிகிறது. நான்கு வேதமும் ஆறு அங்கமும் வாழ்வு பெற்ற தலம் என்கிறார் ஞானசம்பந்தப் பெருமான்.

தொடர்ச்சி 79 ம் பக்கம் பார்க்கவும்.

## திருநாவுக்கரசர் அருளிய திருத்தாண்டகம்



2840 புரிந்தமரர் தொழுதேத்தும் புகழ்தக் கோனகாண
போர்விடையின பாகனகாண புவன மேழும்
விரிந்துபல வுயிராகி விளங்கி னானகாண
விரைக்கொன்றைக் கண்ணியன்காண வேதம் நான்கும்
தெரிந்துமுதற் படைத்தோனைச் சிரங்கொணடோனகாண
தீர்த்தனகாண திருமாலோர் பாகத் தானகாண
திருந்துவயல் புடைதழுவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காணஅவனென் சிந்தை யானே. 6.076.1

2841 வாராரும் முலைமங்கை பாகத் தானகாண
மாமறைக ளாயவனகாண மண்ணும் விண்ணுங்
கூரார்வெந் தழலவனுங் காற்றும் நீருங்
குலவரையும் ஆயவன்காண கொடுநஞ் சுண்ட
காராருங் கண்டன்காண எண்டோ ளன்காண
கயிலைமலைப் பொருப்பனகாண விருப்போ டேனறுந
தேராரும் நெடுவீதித் திருப்புத் தூரில்
திருத்தளியான் காணஅவனென் சிந்தை யானே. 6.076.2

2842 மினகாட்டுங் கொடிமருங்குல் உமையாட் கென்றும
விருப்பவனகாண பொருப்புவலிச்சிலைக்கை யோனகாண
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண
பொனகாட்டக் கடிக்கொனறை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தெனகாட்டுஞ் செழும்புறவின் திருப்புத் தூரில்
திருத்தளியான் காணஅவனென் சிந்தை யானே. 6.076.3

2843 ஏடேறு மலர்க்கமலத் தயனும மாலும
இந்திரனும் பணிந்தேத்த இருக்கின் றானகாண
தோடேறு மலர்க்கடுக்கை வனனி மத்தந்
துன்னியசெஞ் சடையானகாண துகள்தீர் சங்கம
மாடேறி முத்தீனுங் கானல் வேலி
மறைக்காட்டு மாமணிகாண வளங்கொள் மேதி
சேடேறி மடுப்படியுந் திருப்புத் தூரில்
திருத்தளியான்காண அவனென் சிந்தை யானே. 6.076.4

2844 கருமருவு வல்வினைநோய் காற்றி னான்காண
காமருபூங் கச்சியே கம்பத் தான்காண
பெருமருவு பேருலகில் பிணிகள் தீர்க்கும்
பெருமபற்றத் தணபுலியூர் மனறா டிகாண
தருமருவு கொடைத்தடக்கை யளகைக் கோன்றன்
சங்காதி ஆரூரில் தனியா னைகாண
திருமருவு பொழில்புடை சூழ்திருப்புத் தூரில்
திருத்தளியான் காணஅவனென் சிந்தை யானே. 6.076.5

2845 காமபாடு தோளுமையாள் காண நட்டங்
கலந்தாடல் புரிந்தவன்காண் கையில் வெய்ய
பாமபாடப் படுதலையிற் பலிகொள் வோன்காண்
பவளத்தின் பருவரைபோல் படிவத் தான்காண்
தாம்பாடு சினவிடையே பகடாக் கொண்ட
சங்கரன் காண் பொங்கரவக் கச்சை யோன்காண்
சேமபாடு வயல்புடைசூழ் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6.076.6

2846 வெறிவிரவு மலர்க் கொன்றை விளங்கு திங்கள்
வன்னியொடு விரிசடைமேல் மிலைச்சி னான்காண்
பொறிவிரவு கதநாகம் அக்கி னோடு
பூண்டவன்காண் பொருபுலித்தோ லாடை யான்காண்
அறிவரிய நுண்பொருள்க ளாயி னான்காண்
ஆயிரமபே ருடையவன்காண் அந்தண் கானல்
செறிபொழில்சூழ் மணிமாடத் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6.076.7

2847 புக்கடைந்த வேதியற்காக் காலற் காய்ந்த
புண்ணியன்காண் வெண்ணகைவெள் வளையாளஞ்ச
மிக்கெதிர்ந்த கரிவெருவ உரித்த கோன்காண்
வெண்மதியைத் தலைசேர்த்த தண்மை யோன்காண்
அக்கரும்பு பெரும்புன்னை நெருங்கு சோலை
ஆரூருக் கதிபதிகாண் அந்தண் தென்றல்
திக்கணைந்து வருமருங்கின் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6.076.8

2848 பற்றவன்காண் ஏனோர்க்கும் வானோ ருக்கும்
பராபரன்காண் தக்கன்றன் வேள்வி செற்ற
கொற்றவன்காண் கொடுஞ்சினத்தை யடங்கச் செற்று
ஞானத்தை மேன்மிகுத்தல் கோளாக் கொண்ட
பெற்றியன்காண் பிறங்கருவிக் கழுக்குன் றத்தெம்
பிஞ்ஞகன்காண் பேரெழிலார் காம வேளைச்
செற்றவன்காண் சீர்மருவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6.076.9

2849 உரமதித்த சலந்தரன்தன் ஆகங் கீண்ட
வோராழி படைத்தவன்காண் உலகு சூழும்
வரமதித்த கதிரவனைப் பற்கொண் டான்காண்
வானவர்கோன் புயம்நெரித்த வல்லா ளன்காண்
அரமதித்துச் செம்பொன்னி னாரம் பூணா
அணிந்தவன்காண் அலைகடல்சூழ் இலங்கை வேந்தன்
சிரம்நெரித்த சேவடிகாண் திருப்புத் தூரில்
திருத்தளியான் காண்அவனென் சிந்தை யானே. 6.076.10

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப் பதிகங்கள்



272 வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலைத்
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர்போலும்
எங்கள் உச்சி உறையும் இறையாரே 1.26.1

273 வேனல் விம்மு வெறியார் பொழிற்சோலைத்
தேனும் வண்டுந் திளைக்குந் திருப்புத்தூர்
ஊனம் இன்றி யுறைவா ரவர்போலும்
ஏன முள்ளும் எயிறும் புனைவாரே 1.26.2

274 பாங்கு நல்ல வரிவண் டிசைபாடத்
தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூர்
ஓங்கு கோயில் உறைவா ரவர்போலுந்
தாங்கு திங்கள் தவழ்புன் சடையாரே. 1.26.3

275 நாற விண்ட நறுமா மலர்கவ்வித்
தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்
ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் இறையாரே. 1.26.4

275 நாற விண்ட நறுமா மலர்கவவித்
தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்
ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் இறையாரே 1.26.4

276 இசை விளங்கும் எழில்சூழ்ந் தியல்பாகத்
திசை விளங்கும் பொழில்சூழ் திருப்புத்தூர்
பசை விளங்கப் படித்தா ரவர்போலும்
வசை விளங்கும் வடிசேர் நுதலாரே 1.26.5

277 வெண்ணி றத்த விரையோ டலருந்தித்
தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்
ஒண்ணி றத்த ஒளியா ரவர்போலும்
வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே 1.26.6

278 நெய்த லாம்பல் கழுநீர் மலர்ந்தெங்குஞ்
செய்கண மலகு சிவனார் திருப்புத்தூர்த்
தையல் பாகம் மகிழ்ந்தா ரவர்போலும்
மையுண நஞ்சம் மருவும் மிடற்றாரே. 1.26.7

279 கருக்கம் எல்லாங் கமழும் பொழிற்சோலைத்
திருக்கொள் செம்மை விழவார் திருப்புத்தூர்
இருக்க வல்ல இறைவ ரவர்போலும்
அரக்கன் ஒல்க விரலால் அடர்த்தாரே. 1.26.8

280 மருவி யெங்கும் வளரும் மடமஞ்ஞை
தெருவு தோறுந் திளைக்குந் திருப்புத்தூர்ப்
பெருகி வாழும் பெருமா னவன்போலும்
பிரமன் மாலும் அறியாப் பெரியோனே. 1.26.9

281 கூறை போர்க்குந் தொழிலா ரமண்கூறல்
தேறல் வேண்டா தெளிமின் திருப்புத்தூர்
ஆறும் நான்கும் அமர்ந்தா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் இறையாரே. 1.26.10

282 நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேடர் உறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல் பாடல் வல்லார் தமக்கென்றும்
அல்லல் தீரும் அவலம் அடையாவே. 1.26.11

## அருணகிரிநாதர் அருளிய திருப்புத்தூர் திருப்புகழ்



கருப்புச சாப னனைய இளைஞாகள
பரமிக்கக் காத லுலவு நெடுகிய
கடைக்கட பாாவை யினிய வனிதையா ..... தனபாரங
கரிறறுக கோடு கலச மலிநவ.
மணிசசெப் போடை வனச நறுமலா
கனத்துப் பாளை முறிய வருநிக ..... ரிளநீாபோற |
பொருப்பைச சாடும் வலியை யுடையன
அறச்சற றான இடையை நலிவன
புதுக்கச சார வடமொ டடர்வன ..... எனநாளும
புகழ்ச்சிப் பாட லடிமை யவரவர்
ப்ரியப்பட் டாள வுரைசெ யிழிதொழில்
பொகட்டெப் போது சரியை கிரியைசெய் ..... துயிாவாழவேன
இருட்டுப் பாரில் மறலி தனதுடல்
பதைக்கக் கால்கொ டுதைசெய் தவன்விழ
எயிறறுப் போவி யமர ருடலவர் ..... தலைமாலை
எலுப்புக் கோவை யணியு மவாமிக
அதிாததுக காளி வெருவ நொடியினில
திருடடுப் பாணி யிடப முதுகிடை
சமுககிட டேறி யதிர வருபவா
செலுத்துப் பூத மலகை யிலகிய ..... படையாளி
செடைக்குட் பூளை மதிய மிதழிவெ
ளெருககுச சூடி குமர வயலியல்
திருப்புத் தூரில் மருவி யுறைதரு ..... பெருமானே.

# வயிரவநாத மாலை

## காப்பு

சீர்சால் திருப்புத்தூர்ச் செல்வத் திருக்கோயில்
பேர்சால வயிரவன் பேரின்பம் – ஓர்வானாய்
வீற்றிருக்கும் யோக வியப்புரைக்கு மாலைதனை
நூற்றிருக்கும் வேழமுருகன் நோன்று.

## நூல்

1. இதழிமா வனத்தின் கண்ணே எழில்பொலி கோயிற் காவல்
இதமுற வேற்றுக் கொண்ட எந்தையே சிவனூர்மைந்த
முதமுறு ஞான யோக முறைமையை விளக்கும் யோகி
வதமுற வவுணர்க் காய்ந்த வயிரவ நாத போற்றி.

2. பொழிமத வேழக் கொம்பாற் பொன்மலை யெழுதும்பிள்ளை
அழிதொழில் விழைந்த சூரனுதியர்க் களைந்தபிள்ளை
தொழில்தெளி ஐயன் என்றதோன்றல் போற்றிருப்புத்தூரில்
வழிவழி யோகம் பூண்ட வயிரவ நாத போற்றி.

3. இந்திரன் மைந்தன் முன்னாள் எதிருது மூழையை மூட
அந்திலங் கடைந்த யோகி அருஞ் பெருஞ்சாபமிட்டே
தந்திரம் சயந்தற்காகச் சாற்றுவார் நினைச் சார
மந்திர முரைத்தார் புத்தூர் வயிரவநாத போற்றி

4. காதலில் மயலார் உண்டோ கன்னியர் பின்னே செல்லாப்
போதமே பொருந்து சான்றோர் புவியிடை வானிலுண்டோ
சீதளி யிறைவன் பாங்கர்த் திறமுற யோகம் பூண்ட
மாதவ பிரம சாரி வயிரவ நாத போற்றி.

5. எம்மையார் புரப்பா ரென்றே இருளிடை யிமையோர் வேண்ட
உம்மையான் புரப்ப லென்றே ஓச்சிய தண்டபாணி
செம்மையின் நன்மை யெல்லாம் திருத்தனியிருந்து நல்கும்
வண்மைசால் ஞான யோகி வயிரவநாத போற்றி.

6. கயிரவ மனைய வாயார் காதலிற் கலங்கா நெஞ்ச
செயிரறு நெறியை நாட்டும் திறமுறு தண்டபாணி
உயிரற வவுணர் கூட்ட மொழித்தருள் காசிக்க கால
வயிரவ திருப்புத்தூர் வாழ்வயிரவநாத போற்றி.

7. நல்லவர் மனத்தேநிற்கும் ஞானவான மூர்த்தி
அல்லவர் மனத்தைவாட்டும் அனல்தே றிவிழியின்மூர்த்தி
இல்லவர் வலையுட் சிக்கா இணையறு பிரம சாரி
வல்லவர் விழுத்தும் புத்தூா் வயிரவ நாத போற்றி.

8. நன்றியை மறந்தார் தம்மை நாவினால் இறையனெம்மா
வென்றியை யுரையார் தம்மை விழலரைப் பகைத்துளாரை
சொன்றியை யமலற் கொன்றே சொற்றலும் விழையார் தம்மை
வன்றியை நிகர்ப்ப மாய்க்கும் வயிரவ நாதா போற்றி.

9. கால்கர முடக்கி வைத்தே கவுரிக் கூத்திடுவான் பக்கல்
நூல்கர வினிலே வைத்த நோன்மைநன் குணருநோக்கால்
வேல்கர மேந்தும்பிள்ளை வியப்புற வீரம் காட்டி
மால்தரும் யோகம் பூண்ட வயிரவ நாத போற்றி.

10. பிள்ளையைத் தருக வென்ற பித்தனை நோக்கி யந்தாள்
பிள்ளையைக் கரங்கால் வேருப் பிரித்தனை தந்த வன்னி
பிள்ளையை நாளை காண்க பெய்கென விசைத்தபிள்ளாய்
வள்ளையிற் கரத்தைச் சாத்தும் வயிரவ நாத போற்றி.

<u>வாழ்த்து</u>

வாழிய திருப்புத்தூரின் வயிரவ நாத யோகி
வாழிய வடுகன் காவல் வாய்த்துள கோயிற்-றேவன்
வாழிய திருப்பத்தூரே வள்ளலின் வாமத்தேவி
வாழிய முருகன் பாதம் விழுத்திய மளித்தர் தாமே.

- திராவிட கவிபூணம் கவிராஜ பண்டிதர் நா. கனகராக ஐயர் அவர்கள் எழுதி
திருப்புத்தூர். சு. இராமசாமி ஐயர் அவர்களால் 1964 பதிப்பிக்கப் பெற்றது

அருணகிரிநாதர், தமிழ்நாட்டில் கி.பி. 15 ஆம்நூற்றாண்டில் வாழ்ந்து முருகக் கடவுள்மீது பாடல்கள் எழுதிப் புகழ் பெற்ற அருளாளர். இவர் திருவண்ணாமலையில் பிறந்தார் என்றும் காவிரிப் பூம்பட்டினத்தில் பிறந்தார் என்றும் சொல்கின்றனர். இவர் தமிழ் மொழி, வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் புலமை பெற்றவர். அருணகிரிநாதர் நூல்கள் மொத்தம் 9 . அவை



http://www.tamilkalanjiyam.com

- கந்தர் அந்தாதி (Kanthar Anthathi)
- கந்தர் அலங்காரம் (Kanthar Alankaram)
- கந்தர் அனுபூதி (Kanthar Anupoothi)
- சேவல் விருத்தம் (Seval Virutham)
- திருஎழுகூற்றிருக்கை (Thiruvezhukoorrirukkai)
- திருப்புகழ் (Thiruppugazh)
- திருவகுப்பு (Thiruvaguppu)
- மயில் விருத்தம் (Mayil Virutham)
- வேல் விருத்தம் (Vel Virutham)

# யோகபைரவ மாலை

நாளும் கோளும் என் செய்யும் யோகபைரவத்
தாளும் தலையும் இருக்கும் போது

**காப்பு**

எண்ணியசெயல் யாவும் இனிதுறவே நடத்திவைக்கும்
புண்ணிய ஒன்றை மருப்பன் யோகபைரவ மாலை
பொன்னியெனப் பெருகி புவன இன்பமெலாம் தரும்
வன்னி மரத்தடியான் கழல்



போகாத்துயரம் போம்புரியாவம் போம், புவிமீ
தேகும் இன்பமெலாம் கிட்டும் - சகலமும் தந்து
யோகநிலை அருளும் திருப்புத்தூர் பதிவாழ்
யோகபைரவன் தாள்

சோதியாய் சுடராய் சூழ்கின்ற உயிரெலாமாகி
பாதியாகி நின்ற பரமனின் ஆனை ஏற்று
மேதினி அருள்புரிய எட்டெட்டு பைரவர்க்கும்
ஆதியாகிய திருப்புத்தூர் யேஸகபைரவனே.

கூர்கொண்ட எயிறும், பிணைத்த பாதமும், ஆழிஆர்
கார்கொண்ட ஐடைமுடியும், கரகமலம்தரித்த இடியும்
சீர்கொண்ட திருத்தளியானை வழி ஏத்தும்
பார்கொண்ட திருப்புத்தூர் யோக பைரவனே.

பேயுடை பூதபிசாசுகள் பிடித்தாட்டுகின்ற
நோயுடை யோர்க்கெலாம் துயர்தீர்த்து விண்ணில்
ஞாயிறு முதலான கிரகங்களை ஆட்டுவிக்கும்
தூயனே திருப்புத்தூர் யேஸகபைரவனே.

கருதி வரும் செயல்யாவும் உறுதிபெறவே அருளும்
கருணைபொழி நயனம் மூன்றும் கரமிரண்டும்! அன்பால்
உருகி வழிபடுவோர் தமக்கு புனிதநெறி பொலிந்திடவே
பெருகி அருள்வாய் திருப்பத்தூர் யோகபைரவனே.

அல்லும் பகலும் நினைந்துருகி நெஞ்சங்
கல்லும் கரையும் வண்ணம் உன்னை அன்பால்
உள்ளும் புறமும் புகழ்ந்து ஏத்த அருள்வாய், அருள்
வெள்ளம் தரும் திருப்பத்தூர் யோகபைரவனே.

அழியாப்புகழும் அல்பகலுமெல்லாம் நின்மேல்
கழியாச் சிந்தையும் கசிந்து உள்உருகும்
செழியான தமிழ்க்கவியும் அருள்வாய்
எழில் சேர் எந்தை திருப்பத்தூர் யோகபைரவனே.

தவமும் அறமும் நின்பால் தவறாத அன்புநெறியும்
பவமிலாச் செல்வமும் பலகலையும் பணிவும் மெய்ஞானமும்
புவனமெலாம் நின்புகழ் ஏத்தும் வரமும் எம்பால்
மேவும்படி அருள்வாய் திருப்புத்தூர் யோகபைரவனே.

குழகனே கொடுதுயர் விநாசனே எந்தன்
அழகனே பெலப் பிரதமனே பெலவி
கரணனே கலவி கரணனே கொன்றைவனப்
பிரமேசனே யோகினி குரவனே சரண்.

-சிவபாரதி

## சிவகாமி பாமாலை

ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்...
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்...

வன்னிமர அடிஅமர்ந்து வற்றாத வளமதை
வரமருளும் கணநாயகன்!
வந்தவர் வெந்துயர் சிந்திடச்செய்திடும்
வான்போன்ற குணநாயகன்!
அன்னையாய் தந்தையாய் அறங்கூறும் நண்பனாய்
ஆயிருர் கலந்த வேழன்!
அருகை எடுத்து அவன் அருகிலே செல்வோர்க்கு
அருட்தரும் தர்மசீலன்!
பொன்னி நதி தந்தவனின் புண்ணியப்பாதம் தொழு
போகாத துயரம் போகும்!
புரமெரித்த ஈசனின் புதல்வனைப் போற்றிட
புதுவாழ்வு வந்து ஏகும்!
என்னையிங்கு பாட வைத்த இன்தமிழ் நாயகனின்
இனிய பெயர் பாதம் போற்றி!
அன்னை சிவகாமியின் அருட்பா சூட்டிட
அவனருள் நிற்கும் சாட்சி.

சிவனையே ஆகமம் தொழுகின்ற தென்பதால்
சிவ(ஆ) காமி பெயர் வந்ததோ?
சிந்தையில் சிவனையே காமத்தால் சேர்ந்ததால்
சிவகாமி பெயர் ஆனதோ!
தவவாழ்வருளிடும் தத்துவச் செல்வியின்
தளிர்க்கோலம் ஈஃதுதானோ?
தயையுடன் கருணையும் அன்பையும் தந்திடும்
தானெழில் நிறைந்த அழகோ!
பவவினைதீர்த்துப் பலகலையும் தந்தருளும்
பாரதியின் வடிவம் நீயோ!
பாடலில் தமிழாகப் பதித்தவர்க்கு அமிழ்தாகப்
பரிவுடன் நிற்கும் தாயே!
இபமாமுகன் தனைப்பெற்ற அன்னையே
இனிய திருப்புத்தூரின் வாழ்வே!
இளையன் இவன் கவிதைகளில் எழில் நடம்புரிகின்ற
எமதன்புச் சிவகாமியே!

மாறுபடு சூரர்குலம் நீறுபட வேல்தந்த
மாசக்தி தேவியும் நீ!
மகிடனின் தலைகொய்து மண்பதையைக் காக்கின்ற
மகிசாசுரமர்த்தினி நீ!
ஆறுஎன தமிழ்பெருகக் கூடலின் சங்கமதில்
ஆட்சிசெய்த மீனாட்சி நீ!
ஆதி (சிவ) சங்கரனின் ஆனந்தலகரியில்
ஆனதொரு கவிதையும் நீ!
சோறுதனைச் சுமந்து வள்ளலார் பசிதீர்த்த
சுந்தரச் செல்வியும் நீ!
சொல்லால் ஒரு கோவில் செய்த அபிராமிப்பட்டருக்கு
ஒளிதந்த நிலவு நீயே!
வீறுபடு மருதிருவர் வெற்றி (மிகு) திருப்புத்தூரில்
விருப்பமொடு வந்த மயிலே!
விளையும் இவன் கவிதைகளில் விளைகின்ற சொல்லெலாம்
சிவகாமி உனது செயலே!

தில்லையில் ஆடிய தாகம் தீராமல்
திருப்புத்தூர் ஆடவந்தாய்
திருவிற்காய் எம்பிரான் நடம் செயும் கோலத்தை
களிப்புடன் பார்த்து நின்றாய்
இல்லமென என் மனதைத் தருகிறேன் நீ

இப்போது குடியேறுவாய்
இனிய நலம் தந்துலகில் இன்பமெலாம் பெருகிட
எமக்காக அருள்செய்குவாய்
அல்லல்கள் துயரங்கள் அகலாதபாவங்கள்
அத்தனையும் மடைமாற்றுவாய்
அன்பான மக்களை, உயிர்களை, தேசத்தை
அறந்தந்து காத்து நிற்பாய்
பொல்லாரை அழித்திட புரமெரித்த ஈசனின்
பங்கினில் குடியிருந்தோய்
புத்தெழில் திருப்புத்தூர் பதிவாழ் தேவியே
புவனத்தின் பிடிமை தீர்ப்பாய்.

தத்துவ முத்தமிழ் நித்தமும் சுரக்கவே
தனயனுக்காணைமிட்டாய்
தானெழில் தமிழிலே கவியினைப் பொழிந்திட
தாயவள் கேட்டிருந்தாய்
சித்தரைப் பாதத்தில் சிந்தையை வைத்திட்டோம்
சீரிய சிந்தைதருவாய்
சிறுமையொன்றில்லாத பெருமைகள் தந்துலகில்
சீரிய சிந்தைதருவாய்
அத்தனை அணைத்திடும் அன்புமிகு கரங்களால்
அடியேனை அணைக்க வருவாய்
அம்மா அம்மா என அகம்நெகிழக் கூவினேன்
ஆதாரமாக வருவாய்
தித்திக்கும் அருள்தரும் திருத்தளீசன் மகிழ்
தேவியே சிவகாமியே
தேடிவரும் அடியார்க்கு கோடிநலம் தருகின்ற
திருப்புத்தூர் வாழும்உமையே.

பொங்குபெரு ஆழியில் புனிதமிகு தீயினில்
பூவுலகின் மண்மீதினில்
புவனத்தை இயக்கிடும் காற்றினில் மழையினில்
புல்முதல் உயிர்கள்வரையில்
அங்கமென உறவாடும் அன்பான கற்றத்தில்
ஆர்வமுள நட்பினிடத்தில்
அசைகின்ற மரம்செடி கொடிகளில் எனை
ஆள்கின்ற தமிழ்க் கவியினில்
எங்கெங்கு காணினும் நின்வதனம் வேறன்றி
காண்கிலேன் அன்புத்தாயே

தொடர்ச்சி
பக்கம் 49.



# சின்மயானந்தரின் ஆன்மிக மொழிகள்



அரும்பு லேனா
கீழச்சிவல்பட்டி

இன்றைய காலக்கட்டத்தில் மன உளைச்சலுக்கு (டென்சன்) ஏராளமானோர் ஆளாகி வருகின்றார்கள். காரணம், வாழும் முறை தெரியாமல் வாழ்க்கைச் சூழலைச் சிக்கனமாக்கிக் கொள்வதால் தேவையில்லாத படபடப்பு உருவாகிறது.

சரியான வாழ்க்கை முறையை அறிந்து கொள்ள முற்படாமல் வாழ்வதுதான் படபடப்புக்குக் காரணமாகிறது. மன அமைதிக்காக மருந்துகளையோ, மதுவையோ, பொழுதுபோக்குகளையோ நாடுவதால் எவ்விதப் பயனும் ஏற்படப் போவதில்லை. ஆன்மிக வழி மட்டுமே நிரந்தர மன அமைதியைத் தரும்.

வாழ்க்கை ஆற்றின் நீரோட்டம் போன்றது. அதைத் தடுத்து நிறுத்துவதால் யாதொரு பயனுமில்லை. ஆனால், வழி மாற்றுவதால், வடிகால்களை அமைப்பதால் ஒருவர் பல பயன்களை அடைய முடியும்.

மந்திரத்தைச் சொல்லப் பிரதிகா (விக்கிரகம்) பிரதிமா (வடிவம்) இரண்டில் ஒன்றாவது ஆரம்பத்தில் ஒருவருக்குத் தேவைப்படுகிறது. முதலில் கணக்குப் பாடம் கற்றுக் கொள்ளும்போது வாய்பாடு தேவை. பிறகு படிப்படியாக முன்னேறிய பின் அது இல்லாமல் ஒருவரால் கணக்குப் போட முடியும். அதுபோல, மந்திரங்கள்மூலம் மானசீகமாக இஷ்ட தெய்வத்தை நினைத்து வழிபடப் பழகிய பின்

## விரதமும் விருந்தும்



குறிப்பிட்ட சில நாட்களில் பட்டினி விரதம் இருப்பதும், விரதம் முடிந்ததும், விருந்து சாப்பிடுவதும் வழக்கமாக இருக்கிறது. இது ஏன்?

எல்லா மனிதர்களாலும் எப்போதும் விரதம் இருக்க முடியாது. அதைப் படிப்படியாக பழக்கப்படுத்திக் கொள்ளவே சாஸ்திரம் குறிப்பிட்ட சில நாட்களை விரத நாட்களாகக் குறிப்பிடுகிறது.

தெய்வத்திற்குப் பிரியமானது என்றால் இயல்பாகவே நல்லதைச் செய்யும் மனப்பக்குவம் நமக்குள் வந்துவிடுகிறது. அத்தகையப் பண்பை வளர்த்துக் கொள்ளவே விரதங்கள் பயன்படுகின்றன.

http://aanmeegar.blogspot.com/

விக்கிரகமோ வடிவமோ ஒருவருக்குத் தேவைப்படாது.

ஆண்டவனிடம் ஒருவன் மேற்கொள்ளும் பக்தியும் அதை முறைப்படி செலுத்துவதற்காக மேற்கொள்ளும் விரதங்களும் அவனைத் தூய்மைப்படுத்துகின்றன. அந்தத் தூய்மையை அனுபவிக்கும்போது கண் விழிப்பதோ, பட்டினி கிடப்பதோ ஒரு பெரிய சிரமமாக அவனுக்குத் தோன்றாது.

புலன்கள்மூலம் இன்பம் அனுபவித்து அலுத்துப் போன அயல்நாட்டினர் பலரும் இந்துமத வழிபாட்டில் மருந்து இருப்பதாக இந்தியாவை நோக்கி வருகின்றார்கள். இந்து மதத்தின்மூலம் நிரந்தரப் பாதுகாப்பையும் அவர்கள் பெற்று மகிழ்வதைக் காண முடிகின்றது. சரியான வாழ்க்கை முறை என்பதுதான் இந்துமதம். நிலையான இன்பத்தைக் கண்டு உணர வழிகாட்டுவதுதான் இந்துமதம் என்பதை அனைவரும் உணர வேண்டும்.

சாதாரண மனிதனின் சாதாரண சமூகத் தொண்டு நம் கண்ணுக்குப் பெரிதாகப் படுகிறது. ஆனால், அதன் எல்லை மிகக் குறுகியது. ஞானிகள் உலக நன்மைக்காகச் செய்யும் பிரார்த்தனையின் வலிமை கண்ணுக்குப் புலப்படாததாக உள்ளது. ஆனால், அதன் நற்பலன்கள் எல்லை கடந்தவையாக உள்ளன.

ஒரு நாளைக்குப் பத்து நிமிடங்களாவது நம் உடலை எந்தவிதமான பரபரப்பும் இல்லாமல் தளர்வாக இருக்கும்படி வைத்துக் கொள்ள வேண்டும். மனத்தையும் நன்றாகத் தளரவிட வேண்டும். உடல் தளர்ந்ததும் எண்ணற்ற நினைவுகள் அலை புரண்டு வரும். கவலைகள், ஏமாற்றங்கள், ஆசைகள் எல்லாமே




வள்ளலார் வலியுறுத்திய ஒரு விரதம்தான் செவ்வாய்க்கிழமை விரதம். ஆனால், இது முழுக்க முழுக்க முருகப்பெருமானுக்குரிய விரதம் என்று கூறிவிட இயலாது. வள்ளலார் ஆரம்பத்தில் திருத்தணிகை முருகப் பெருமானைத் தொழுது அவரது காட்சி பெற்றவர் என்பது நினைக்கத் தக்கது.

வள்ளலார் ஆரம்பத்தில் முருகனைத் தொழுது வணங்கியவர்

சுப்பிரமணியம் என்பது என்ன? நமது புருவ மத்தியில் உருட்சியாய் ஆறு பட்டையாய் உருட்சியுள்ள ஒரு மணிப் பிரகாசம் பொருந்தியிருக்கின்றது. இந்த ஜோதி மணியை சண்முகமென்று, பெரியோர்கள் சொல்லுவார்கள். இதனன்றி நமது மூலாதாரத்திற்கு மேல் மூன்றிடந்தாண்டி விசுத்தியாக இருதய ஸ்தானத்தில் இடது புறத்தில் ஆறு தலையுடைய ஒரு நாடி இருக்கின்றது. இதைச் சுப்பிரமணியம் என்று சொல்வார்கள். இந்தத் தேகத்திலுள்ள ஆறறிவும் ஒருங்கே சேர்ந்த சுத்த விவேகமென்பதையும் சண்முகம் என்பார்கள். ஆறு ஆதாரங்களில் உள்ள ஆறு பிரகாசத்தையும் சண்முகம் என்பார்கள். ஆயினும், சர்வ தத்துவங்களினது அந்தத்தில் உள்மணிக்கப்பால் சார்ந்த நிறைவாயுள்ள ஆறுதலாகிய சுத்த ஆன்ம அறிவான உள்ளமே சுப்பிரமணியம்... என்று சுப்பிரமணிய தத்துவத்தைப் பற்றி விளக்கியிருக்கிறார் வள்ளலார்.

http://ramanans.wordpress.com

அலைபுரண்டு வந்தாலும் சாதகன் அவற்றைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டும். மெல்ல மெல்ல நினைவலைகள் ஓய்ந்து வெள்ளம் வடிந்து போகும். இது தியானத்தின் ஆரம்ப நிலையாகும்.

தினந்தோறும் காலையிலும் மாலையிலும் பத்து நிமிடங்கள் தொடர்ந்து பயிற்சி செய்து வந்தால் சிறிது நாள்களில் மனம் படிந்து அமரும் நிலை சீக்கிரமாகவே வரத் தொடங்கும். இப்படித் தெரிந்து மனத்தை ஓயவிடும் உத்தியால் மனத்தைப் படிப்படியாகக் கட்டுக்குள் கொண்டு வரலாம். கடவுளிடம் முழு சரணாகதி அடைந்து விடும்போது உள்ளத்தில் இறைவனின் அருள் ஒளி படர ஆரம்பிக்கும் . ஆன்மா ஒளி வீசுவதை உணர முடியும்.

உபநிடதங்கள் சென்னதை அப்படியே ஏற்கும்படி கட்டாயப்படுத்துவதில்லை. மாணவன் தனது குருவை நாடிச் சந்தேகத்தைத் தெளிவுபடுததிக் கொண்டு அறிவை விசாலமாக்கிக் கொள்ளும் முறையிலேயே உபநிடதங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. கடந்த காலத்தை எண்ணிக் கொள்வது, எதிர்கால முயற்சிகளை அளவுக்கு மீறித் திட்டமிட்டு ஏமாற்றம் அடைவது, நிகழ்காலத்தில் நமது முயற்சிகளை வரிசைப்படுத்திக் கொள்ளாமல் குழம்பிப் போவது ஆகிய மூன்று வடிகால்கள்மூலம் ஒருவருடைய சக்தியானது வீணடிக்கப்படுகிறது.

உயர்ந்த இலட்சியங்களுக்காக ஒருவர் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளும்போது அவர் உள்ளத்தில் அரியதோர் சக்தி தூண்டிவிடப்படுகிறது. இவை தீய பண்புகளால் வடிந்து போய்விடும். அபாயம் இருப்பதால் ஒருவர் தம்மைக் காத்துக் கொண்டால் அவரது முயற்சிகளுக்கு வெற்றி கட்டாயம் கிடைக்கும்.

மிருகங்களுக்குத் தமது புலன்களைப் பயன்படுத்தத்தான் தெரியும். அவற்றை அறிவைக் கொண்டு ஆளத் தெரியாது. மனிதர்களிலும் அறிவைப் பயன்படுத்தாதவர்கள் மிருகங்களாகவே இருக்கிறார்கள். இச்சை, கோபம், கெட்ட உணர்வுகளைப் புத்திசாலியாக இருப்பவன் சீராகக் கட்டுப்படுத்தி மகிழ்ச்சியாக வாழ்கிறான். மனத்தைக் கட்டுப்படுத்தி எல்லா விதத்திலும் தன்னுடைய சக்திகளை சுயக்கட்டுப்பாட்டிற்குக் கொண்டுவந்து அவற்றின்மூலம் சிறந்த பலன்களை அடைவதே பிரம்மச்சரியம் எனப்படுகிறது.

ஒருவருடைய நோக்கம் உயர்ந்ததாக, சுயநலமில்லாததாக இருந்து விட்டால். அவர் செய்யும் காரியங்களின் வாசனை அவரைப் பாதிக்காது. காரியங்களின் பற்றற்ற தனிமையே பந்தங்களிலிருந்து ஒருவரை விடுவிக்கும்,

நம் கண்ணுக்குப் புலப்படாத மின்சாரம் நம் வீட்டில் இயங்குகிறது. ஓர் இடத்தில் அது ஒளியைப் பரப்புகிறது. அடுப்பில் அது சூட்டைத் தருகிறது. ஏ.சி.யில் அது குளிர்ச்சியைத் தருகிறது. வானொலியில் அது பாட்டை

## சனிப்பிரதோஷ யாகம்

சனிப்பிரதோஷ நாட்களில் சிவனுக்கு ஹோமம் நடக்கும். பிரதோஷ வேளையில் ஒரே சமயத்தில் யாக குண்ட தீர்த்தத்தால் திருத்தளிநாதர் மற்றும் நந்திக்கு அபிசேகம் நடக்கும்.

இயக்குகிறது. அதுபோல இறைவனும் நம்முடைய மனமாகிய வீட்டில் இருந்து இயக்குகிறான். இறைவன் பார்க்கும் பொருளாக இல்லாவிட்டாலும் அவன் அருள் எங்கும் பரவி இருக்கிறது. இறைவன் அருளால் எல்லா இயக்கங்களும் நடைபெறுகின்றன.வாழ்க்கையில் நாம் எதைச் சந்திக்கிறோம் என்பதை மாற்ற முடியாது. அதுவே பிராப்தம் வாழ்க்கையில் அதை நாம் எப்படி சந்திக்கிறோம் என்பது நம் கையில் இருக்கிறது. அதுவே புருஷார்த்தம் . இதையே உபநிடதங்கள் கூறுகின்றன.

தீவிரமான பக்தியில் ஈடுபட்டு அந்த உணர்வில் ஒன்றிப் போனவர்களுக்குக் கன்னத்திலோ, உடலிலோ குத்தி இருக்கும் அலகு, வேல், ஈட்டி போன்றவை வலிக்காது. அப்படிப்பட்டவர்கள் பக்தி உணர்வில் இல்லாதபோது மருத்துவரின் ஊசிக்குக் கூடப் பயப்படுவார்கள். மருத்துவரின் ஊசிமூலம் வலியை உணர்வார்கள்.

வாழ்க்கையில் இன்பச் சூழ்நிலையை ஏற்றுக் கொள்ளும் மனிதன் துன்பச் சூழ்நிலையும் இறைவன் செயல் என்று உணர்ந்தால் சஞ்சலமில்லாமல் உலகியல் வாழ்க்கையைக் கடக்க முடியும்,

## தோல்வி என்றால்....



- ✓ தோல்வி என்றால் நீங்கள் தோற்றவர் என்று பொருள் அல்ல. நீங்கள் இன்னும் வெற்றி பெறவில்லை என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால், நீங்கள் எதையுமே சாதிக்கவில்லை என்று பொருள் அல்ல. சில பாடங்கள் கற்றுக் கொண்டு இருக்கிறீர்கள் என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால் நீங்கள் அவமானப்பட்டு விட்டதாகப் பொருள் இல்லை. முயன்று பார்க்கும் துணிவு உங்களிடம் உள்ளது என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால் உங்களிடம் சரக்கு இல்லை என்று பொருள் அல்ல. வேறு உத்திகளைக் கையாள வேண்டிய அவசியத்தை உணர்ந்து விட்டீர்கள் என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால் வாழ்க்கை வீணாகி விட்டதாகப் பொருள் இல்லை. மீண்டும் ஆரம்பிக்க ஒரு வாய்ப்பு கிடைத்துள்ளது என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால் விட்டுவிட வேண்டும் என்று பொருள் அல்ல. இன்னும் செம்மையாக உழைக்க வேண்டும் என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால் உங்களால் அடைய முடியாது என்று பொருள் அல்ல. அடையக் கொஞ்சம் தாமதமாகலாம் என்று பொருள்.
- ✓ தோல்வி என்றால் கடவுள் உங்களைக் கைவிட்டார் என்று பொருள் இல்லை. உங்களுக்கு வேறு நல்ல எதிர் காலத்தை நிர்ணயம் செய்து வைத்திருக்கிறார் என்று பொருள்.

# சித்தர்களும் அவர்களின் ஜீவ சமாதிகளும்



1. திருமூலர் – சிதம்பரம்
2. போகர் – பழனி
3. கருவூர்சித்தர் – கருவூர், திருகாளகஸ்தி, ஆணிலையப்பர் கோவில்.
4. புலிப்பாணி – பழனி அருகில் வைகாவூர்
5. கொங்கணர் – திருப்பதி, திருமலை
6. மச்சமுனி – திருப்பரங்குன்றம், திருவானைக்கால்
7. வல்லபச் சித்தர் என்னும் சுந்தரானந்தர் – மதுரை
8. சட்டைமுனி சித்தர் – திருவரங்கம்
9. அகத்தியர் – திருவனந்தபுரம், கும்பகோணத்திலுள்ள கும்பேஸ்வரர் கோவில்
10. தேரையர் – தோரணமலை (மலையாள நாடு)
11. கோரக்கர் – பேரூர்
12. பாம்பாட்டி சித்தர் – மருதமலை, துவாரகை, விருத்தாசலம்
13. சிவவாக்கியர் – கும்பகோணம்
14. உரோமரிசி – திருக்கயிலை
15. காகபுசுண்டர் – திருச்சி, உறையூர்.
16. இடைக்காட்டுச் சித்தர் – திருவண்ணாமலை
17. குதம்பைச் சித்தர் – மயிலாடுதுறை
18. பதஞ்சலிச் சித்தர் – சிதம்பரம், அழகர் கோவில், இராமேஸ்வரம்
19. புலத்தியர் – பாபநாசம், திரு ஆலவுடையார் கோவில்
20. திருமூலம் நோக்கச் சித்தர் – மேலை சிதம்பரம்
21. அழகண்ணச் சித்தர் – நாகப்பட்டினம்
22. நாரதர் – திருவிடைமருதூர், கருவை நல்லூர்
23. இராமதேவச் சித்தர் – அழகர் மலை
24. மார்க்கண்டேயர் – கருவை நல்லூர்
25. புண்ணாக்கீசர் – நண்ணாசேர்
26. காசிபர் – ருத்ரகிரி
27. வரதர் – தென்மலை
28. கன்னிச் சித்தர் – பெருங்காவூர்
29. தன்வந்தரி – வைத்தீஸ்வரன் கோவில்
30. நந்திச் சித்தர் – காசி, திருவாடுதுறை, காளங்கி.
31. காடு வெளிச் சித்தர் – திருக்காஞ்சிபுரம்
32. விசுவாமித்திரர் – காசி, திருவாடுதுறை, காளாங்கி.
33. கௌதமர் – திருவருணை, திருவிடைமருதூர்.
34. கமல முனி – ஆரூர்
35. சந்திரானந்தர் – திருவாஞ்சியம்.
36. சுந்தரர் – வாரிட்சம், திருவாரூர்
37. காளங்கி நாதர் – திருக்கடவூர், திருப்பணந்தாள்
38. வான்மீகி – எட்டிக்குடி, திருவையாறு
39. அகப்பேய்ச் சித்தர் – திருவையாறு, எட்டிக்குடி
40. பட்டினத்தார் – திருவொற்றியூர்
41. வள்ளலார் – வடலூர்











43. சதாசிவப் பிரம்மேந்திரர் – நெரூர்.
44. ராமகிருஷ்ணர், சாரதாதேவியார் – பேலூர் மடம்
45. ராகவேந்திரர் – மந்திராலயம்.
46. ரமண மகரிஷி – திருவண்ணாமலை, மாத்ருபூதேஸ்வரர் ஆலயம்
47. குமரகுருபரர் – காசி.
48. நடன கோபால நாயகி சுவாமிகள் – காதக்கிணறு
49. ஞானாந்த சுவாமிகள் – அனைத்து தபோவனங்கள்.
50. ஷீரடி சாயிபாபா – ஷீரடி
51. சேக்கிழார் பெருமான் – மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் சுவாமி சன்னதிக்குப் பின்புறம்.
52. ராமானுஜர் – ஸ்ரீரங்கம்
53. பரமஹம்ச யோகானந்தர் – கலிபோர்னியா.
54. யுக்தேஸ்வரர் – பூரி
55. ஜட்ஜ் சுவாமிகள் – புதுக்கோட்டை
56. ஆதி பராசக்தி திருக்கோவிலில் 21 சித்தர்களின் ஜீவ சமாதிகள் உள்ளன.
57. கண்ணப்ப நாயனார் – காளஹஸ்தி
58. சிவப்பிரகாச அடிகள் – திருப்பழையாறை வடதளி.
59. குரு பாரா ராம்தேவ் – போகரனிலிருந்து 13 கி.மீ.
60. ராணி சென்னம்மாள் – பிதானூர், கொப்புலிமடம்.
61. பூஜ்ய ஸ்ரீ சித்த நரஹரி குருஜி – மதுரை மாரியம்மன் தெப்பக்குளம் அருகில் சித்தாசிரமம்.



62. குழந்தையானந்த சுவாமிகள் – மதுரை காளவாசல்
63. முத்து வடுகநாதர் – சிங்கம்புணரி
64. இராமதேவர் – நாகப்பட்டினம்.
65. அருணகிரிநாதர் – திருவண்ணாமலை
66. பாடவசேரி தவத்திரு இராமலிங்க சுவாமிகள் தஞ்சை புன்னைநல்லூர் மாரியம்மன் திருக்கோவில்.
67. மௌன சாமி சித்தர் தென்காசியிலிருந்து செங்கோட்டை செல்லும் வழியில் உள்ளது.
68. சிறுதொண்டை நாயனார் – திருச்செட்டாங்குடி.
69. ஒடுக்கத்தூர் சுவாமிகள் – பெங்களூரில் அல்சூர் ஏரிக்கரையில் உள்ளது.



70. வல்லநாட்டு மகாசித்தர் – வல்லநாடு
71. சுப்பிரமணிய சித்தர் – ரெட்டியப்பட்டி
72. சிவஞான பாலசித்தர் – மயிலாடுதுறை முருகன் சந்நிதி
73. கம்பர் – நாட்டரசன் கோட்டை
74. நாகலிங்க சுவாமிகள் – தென்னம்பாக்கம்
75. அழகர் சுவாமிகள் – தென்னம்பாக்கம்
76. சிவஞான பாலைய சுவாமிகள் புதுவைக்கு வடக்கே 6 மைல் தொலைவில் உள்ளது.
77. சித்தானந்த சுவாமிகள் – புதுவையிலுள்ள முதலியார் பேட்டை.
78. சக்திவேல் பரமானந்த குரு – புதுவையிலுள்ள முதலியார் பேட்டை.
79. ஸ்ரீராம் பரதேசி சுவாமிகள் வில்லியனூர் செல்லும் பாதையில் வலப்புறம் அமைந்து உள்ளது.





80. அக்கா சுவாமிகள் – புதுவையில் உள்ள குதிரைக்களம் அருகே.
81. மகான் படே சுவாமிகள் – சின்னபாபு சமுத்திரம்.
82. கம்பளி ஞானதேசிக சுவாமிகள்
புதுவை அருகில் ருத்திர பூமிக்கு சமீபமாக அமைந்துள்ளது.
83. பகவந்த சுவாமிகள் – புதுப்பாளையத்தில் கெடில நதிக்கரையில்.
84. கதிர்வேல் சுவாமிகள் – ஸ்ரீலங்கா, புதுவை அருகில் சித்தன் குடியிலும் சமாதி உண்டு.
85. சாந்த நந்த சுவாமிகள் – ஸ்ரீ சாரதா சிவகங்கை பீடத்திற்கு அருகில் உள்ளது.
86. தயானந்த சுவாமிகள் – புதுப்பாளையத்தில் கெடில நதிக்கரையில்
87. தஷிணாமூர்த்தி சுவாமிகள் – பாண்டிசேரியடுத்த பள்ளித் தென்னல்.
88. ஞானகுரு குள்ளச்சாமிகள் – புதுவை
89. வேதாந்த சுவாமிகள் – புதுவை, திருமுத்துகுமார் சுவாமிகள் தோட்டத்தில் உள்ளது.
90. லஷ்மண சுவாமிகள் – புதுவையிலுள்ள புதுப்பட்டி.
91. மண்ணுருட்டி சுவாமிகள் – புதுவையிலுள்ள சுதேசி காட்டன் மில் எதிரில்.
92. சுப்பிரமணிய அபிநய சச்சிதானந்த பாரதி சுவாமிகள்
பாண்டிசேரியிலுள்ள எல்லப் பிள்ளை.



93. யோகி ராம் சுரத்குமார் (விசிறி சுவாமிகள்) – திருவண்ணாமலை.
94. கோட்டூர் சுவாமிகள் – சாத்தூர் அருகிலுள்ள கோட்டூர்.
95. தகப்பன் மகன் சமாதி – கிரிவலம் வந்த நல்லூர் அருகே பனையூர்
96. நாராயண சாமி அய்யா சமாதி – நாகர்கோவில்.
97. போதேந்திர சுவாமிகள் – தஞ்சை மாவட்டத்திலுள்ள மருதநல்லூர்.
98. அவதூர ரோக நிவர்தீஸ்வரர் சுவாமிகள் – சென்னை பூந்தமல்லி
99. வன்மீக நாதர் – எட்டிக்குடி
100. தம்பிக்கலையான் சித்தர் – சென்னை திருவான்மியூர் மருந்தீஸ்வரர் திருக்கோவிலில் உள்ள 108 சிவலிங்கங்களில் இரண்டாவதாக உள்ள லிங்கத்தில் ஐக்கியம் ஆகியுள்ளார்.



101. மெய்வரத் தம்பிரான் சுவாமிகள்
திருச்சி, ஜெயங்கொண்ட சோழபுரத்திலிருந்து 25 கி.மீ. தொலைவில் உள்ளது.
102. குகை நாச்சியார் மகான் – திருவண்ணாமலை.
103. வாலை குருசாமி – சிதம்பரத்திலுள்ள கொம்மடிக் கோட்டை.
104. பாம்பன் சுவாமிகள் – திருவான்மியூர்.
105. குமாரசாமி சித்தர் சுவாமிகள் – கோயமுத்தூரிலுள்ள பூராண்டான் பாளையம்.
106. பெரியாழ்வார் சுவாமிகள் – அழகர் கோவில் (மதுரை)
107. மாயம்மா ஜீவசமாதி – கன்னியாகுமரி
108. பரமாச்சாரியார் ஜீவசமாதி – காஞ்சிபுரம்.

33 ஆம் பக்கத் தொடர்ச்சி

எம்மக்கள், எமதுறவு, எம்முடமை
யாவையும் தந்திட்டேன் சரணம் நீயே
வெங்கொடுமை தீர்க்கின்ற திருத்தளீசன் மடியினில்
விளையாடும் தமிழ் அன்னமே
வினைவிலக்கும் திருப்புத்தூர் கோயில்வாழ் அன்னையே
வேனில் சிவாமி உமையே!

தேரோடும் நெடுவீதி திருப்புத்தூர் அமர்ந்த
தெய்வமகள் நீயில்லையோ?
தேம்பிஅழும் குழந்தைக்கு சீகாழிபதியினில்
ஞானப்பால் தரவிலையோ?
சீரோடும் கவியோடும் சிந்தித்த கம்பனுக்காய்
கூடை நீ சுமக்கவிலையோ?
சிக்கலில் வேல் தந்து செந்தூரில் சம்ஹாரம்
சிறப்பிக்க உதவவிலையோ?

காராடும் கூந்தலில் கனிவான மொழியினில்
கணவனை மயக்கவிலையோ?
கணபதியும் முருகனும் மட்டும்தான் பிள்ளையோ
நான் உந்தன் மகனில்லையோ?
நீறாடி நினைவில் உனை மீட்டிவரும் எனக்கு
வரமருள மனமில்லையோ?
நீக்கமற நிறைந்து காக்கும் சிவகாமிக்கிது
பழிபாவம் சேர்க்குமிலையோ?

தானமும் தர்மமும் தவயோக சிந்தையும்
தலைவி நீ அருளவேண்டும்!
தளராத நெஞ்சமும் தமிழெனும் மஞ்சமும்
தந்து நீ காக்க வேண்டும்!
வானமழை பெய்திடவும் வளமெலாம் பெருகிடவும்
வரம் தந்து நல்க வேண்டும்!
ஊனமொன்றில்லாத உண்மையும் நீதியும்
உலகினில் ஓங்கவேண்டும்!
உயர்பகைகள் அணுஆயுதம் ஒழிந்து
அமைதி தினம் தழைக்க வேண்டும்!
ஈனமொன்றில்லாமல் இப்பிறவி கடைத்தேற
எமக்கு நீ அருள வேண்டும்!
இசைபாடும் சிவகாமி நின் இணையடிகள் வைக்கிறேன்
இவைதந்து நலம் சேர்க்க வேண்டும்!

அலைபாயும் மனங்கட்கு நிலையான அமைதிதர
அருள்வந்து எளிதில் கூடும்!
அன்பான சுற்றங்கள் அறிஞர்கள் நண்பர்கள்
அகலாத கூட்டுச்சேரும்!
கலைஞானம் கவிஞானம் கற்றோர்கள் சபையிலே
கனிவான அறங்கள் ஏறும்!
கழலடி பணிவோர்தம் நிழலான குறையாவும்
கடிதினில் விலகி ஓடும்!
மலைபோன்ற துன்பங்கள் சிவகாமி சந்நிதியில்
பனிபோல மறைந்து போகும்!
மலைமகள் அருள்தர மனதால் நினைத்தாலே
மாபெரும் மகிழ்ச்சி சேரும்!
சிலையாக நின்றாலும் சிந்திப்போர் உளத்தினில்
சிக்கல்கள் சிதறலாகும்!
சிவகாமி அருளுக்கு விலையாகச் சொல்வதற்கு
வேறேது நிகருமாகும்.

வானேறுமதியென வையத்தைக் குளிர்விக்க
வரம்தரும் கரங்கள் வாழ்க!
வருவோர்க்கும் அன்புதருவோர்க்கும் ஈகின்ற
வற்றாத சிந்தை வாழ்க!
மீனேறுவிழிகளாய் மிடிமை தீர்க்கின்ற
மேன்மைமிகு நயனம் வாழ்க!
மீளாத துயர்தீர்ந்து மேதினிக்கு நலம்தரும்
மேலான தோள்கள் வாழ்க!
கானேறு கூந்தலும் கனியான இதழ்களும்
கருணைமிகு தாளும் வாழ்க!
கழல் இறைஞ்சும் குறைகளையும் கவிமலரை ஏற்கின்ற
கண்தொடவரும் செவிகள் வாழ்க!
தேனேறு சொல்லினால் திருத்தளியானை மகிழ்விக்கும்
தேவி சிவகாமி வாழ்க!
திசைதொறும் நின் இசைபாடும் இப்பாவினைப் படிப்பவர்கள்
தினம்தினம் வாழ்க! வாழ்க!

**வேறு**

பைரவன் காவலுற பையரவுதனைச் சூடி
பஞ்சமுகன் நடனஞ்செய்ய!
பன்னிருகையவனின் பாதந்தனைத் தொழுது
அருணகிரி மாலை சூட்ட!
ஐயனவன் புகழ்ஏற்றி அப்பரும் சம்பந்தரும்
அருட்பா மகிழ்ந்து பாட!
அலைகடல்தனில் கிடந்தோன் கொன்றைமர அடி
அமர்ந்து யோகத்தில் ஆழ்ந்திருக்க!
பையரவுதனைச் சூடித் திருத்தளீசன் சிவகாமி
கன்னியுடன் வீற்றிருக்க!
இலக்குமியும் கார்கோடன் வாசுகியும்
இன்பமாய் ஏகிதினம் காத்திருக்க!
இயைவன செய்து நலம் எல்லாமும் தருகின்ற
கோவிலைத் தினம் போற்றுவாய்!
இகம்முதல் பரசுகம் தந்திடும் இன்பத்தின்
இனியதொரு தேன்தோற்றுவாய். -சிவபாரதி

# ஆன்மிக இணையதளங்கள்






www.divyadesam.com (108 திவ்ய தேசங்கள்)
http://www.templeshindu.com (இந்து கோயில்கள்)
www.pilgrimage-india.com › India Temples (கோவில் சுற்றுலா)
www.sanatansociety.org/hindu_gods_and_goddesses.htm
www.pillayarpattitrust.com (பிள்ளையார்பட்டி ஆலயம்)
http://kkmutt.org (குன்றக்குடி ஆதினம்)
http://palani.org (பழனி - திருத்தனி)
www.tirumala.org (திருப்பதி)
www.ayyappan-ldc.com (சபரிமலை)
www.raaga.com/channels/hindi/devotional.asp (பக்திப் பாடல்கள்)

# அருள்மிகு யோக பைரவர் திருக்கோவில் திருத்தலச் சிறப்புகள்

சே.இளஞ்செழியன், திருப்புத்தூர்

இது பாண்டிய நாட்டுத் திருத்தலம் -திருமுறைகள் பாடல் பெற்ற திருத்தலம் பதிநான்கு, அதில் ஒன்றாகத் திகழ்வது திருப்புத்தூர் திருத்தலம். திருஞானசம்பந்தர்-திருநாவுக்கரசு சுவாமிகளால் பாடல் பெற்ற திருத்தலம். அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழ் பாடல் பெற்ற செவ்வேல் எழுந்தருளிய திருத்தலம்.

பைரவசுவாமி யோக நிலையில் எழுந்தருளிய வற்றாது- முற்றாது அருள் சுரந்து வரும் திருத்தலம். தமிழகத்திலேயே யோக நிலையில் உள்ள பைரவர் ஆலயம் இத்திருத்தலம் மட்டுமே. ஆண்டுதோறும் சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை சயந்தன் பூஜை கொண்டாடப்படுகிறது. புதிதாகத் திருமணம் செய்த மணமக்கள் அன்றைய தினம் மாவிளக்கு வைத்து பைரவரை வணங்கினால் மாங்கல்ய பலம் குழந்தைச் செல்வம் கிட்டும் என்பது ஐதீகம். எல்லாவற்றிருக்கும் மேலாக பைரவர் சந்நிதியில் அமர்ந்து தியானம் முறையாகச் செய்தால் உடலில் புத்துணர்வும் மன அமைதியும் கிட்டும்.

ஆலயத்தின் வடக்குப் பக்கம் தனிச் சந்நிதியில் சிவகாமி அம்மன் அருள்பாலிக்கிறார். வடக்கு நோக்கி வள்ளி தெய்வானையுடன் முருகன் அருள்காட்சி தருகின்றார். திருத்தலம் இரண்டாவது பிரகாரத்தில் அபூர்வமான வன்னி மரம் உள்ளது. வன்னிமரத்தின் கீழ் விநாயகர் இருந்து அருள் சுரக்கின்ற திருத்தலம். வன்னிமர விநாயகரை வழிபட்டால் முற்பிறவி பாவங்கள் விலகும் என்பது ஐதீகம்.

இலக்குமிக்காக இறைவன் கௌரிதாண்டவம் ஆடிய திருத்தலம். நந்தி மத்தளம் வாசிக்க எமபெருமான் ஆடுகின்ற காட்சி எங்கும் காணக் கிடைக்காத ஒன்று.

எல்லாவற்றிருக்கும் மேலாக வால்மீகி முனிவர் தவம் செய்த திருத்தலம். வால்மீகி முனிவரின் திரு உருவ விக்கிரகம் புதிதாக இக்குடமுழுக்கு விழாவில் வைக்கப்பட இருக்கிறது. சிவாலயம் என்றாலே 63 நாயன்மார்கள் இருந்தால்தான் பூர்த்தி என்பார்கள் அதையும் நிறைவு செய்யும விதமாக நாயன்மார்கள திரு உருவ விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்யப்படவிருக்கிறது.

எல்லாவற்றிருக்கும் மேலாக ஓங்காரப் பிரணவ மூர்த்தியே சரக்கொன்றை மரத்திலிருந்து ஓங்காரத்தை உணர்த்துகின்ற திருத்தலம். இத்திருத்தலம் அனைத்துத் தெய்வங்களும் தவமிருப்பதாக அமைந்துள்ளது. உதாரணமாக யோகபைரவர், யோகநாராயணன் மகாலெட்சுமி, பிருகு முனிவர், கார்கோடகன், வாசுகி, வால்மீகி இன்னும் பல புண்ணிய ஆத்மாக்கள் தவமிருந்த புண்ணியதலம்.

மனிதர்கள் தாங்கள் செய்த கர்மாக்களைப் நோக்கி முக்தி அளிக்கவடிய தலமாக காசி சேத்திரம் உள்ளது. ஆனால்,தெய்வசொரூபங்கள் முக்தி வேண்டி தவமிருந்த ஸ்தலம் .

ஆகவே, காசியை விட ஒருபடி உயர்ந்த திருத்தலமாக இத் திருப்பத்தூர் திருத்தளிநாதர் ஸ்தலம் சிறப்புடன் விளங்குகின்றது. இதுவே உண்மை.

# திருப்புத்தூர் கல்வெட்டுச் செய்திகள்

முனைவர் வள்ளி சொக்கலிங்கம், காரைக்குடி.

கல்லில் எழுத்துகளைப் பொறிக்கும் வழக்கம் மிகப் பழங்காலந்தொட்டே தமிழகத்தில் நிலவி வந்துள்ளது.

"நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போல் காணுமே"

என்பதற்கொப்ப கல்மேல் எழுதப்பட்ட எழுத்துகள் இன்னும் நிலவி, வரலாற்றை உணர்த்திக் கொண்டிருக்கின்றன. கல்லில் எழுத்தைப் பொறிப்பதைத் திருப்புத்தூரில் உள்ள கல்வெட்டுகள் 'கல்வெட்டுதல்' என்று குறிப்பிடுகின்றன.

அரசியல் வரலாற்றில் திருப்புத்தூருக்கு முக்கியத்துவம் உண்டு. முற்காலப் பாண்டியர், பிற்காலப் பாண்டியர் பற்றியும் மற்றும் சமுதாயம், பண்பாடு, அரசியல், சமயம் பற்றியும் திருப்புத்தூர்க் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. நூற்றுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் திருத்தளிநாதர் கோயிலில் உள்ளன. கி.பி. 1908 இல் 52 கல்வெட்டுகள் படிக்கப்பட்டு அவற்றின் செய்திக் குறிப்புகள் அவ்வாண்டு அறிக்கையில் 89 முதல் 140 முடியும் எண்களாக வெளிவந்துள்ளன. இவற்றில் பாண்டியர்களைச் சேர்ந்த 10 கல்வெட்டுகளின் வாசகங்கள் தென்னிந்திய தொகுதி 14 இல் வெளிவந்துள்ளன. க.பி. 1935 இல் 30 கல்வெட்டுகள் படிக்கப்பட்டு அவற்றின் செய்திக் குறிப்புகள் அவ்வாண்டு அறிக்கையில் 163 முதல் 191 முடியும் எண்களாக வெளிவந்துள்ளன. கி.பி. 1962 இல் 6 கல்வெட்டுகள் படிக்கப்பட்டு அவற்றின் செய்திக் குறிப்புகள் அவ்வாண்டு அறிக்கையில் 530 முதல் 536 முடியும் எண்களாக வெளிவந்துள்ளன. சாசன மாலையில் ஒரு கல்வெட்டின் வாசகம் வெளிவந்துள்ளது.

திருத்தளிநாதர் கோவில் கருவறை, அதிட்டான சுவர்ப் பகுதிகளிலும், முதல் திருச்சுற்று மாளிகைச் சுவர்களிலும், இரண்டாம் திருச்சுற்றுச் சுவர்களிலும், பைரவர் சன்னிதிக்கு முன்னுள்ள மண்டபத்திலும், ஏராளமான கல்வெட்டுகள் உள்ளன. கோயிலைப் புதுப்பிக்கும்போது ஆங்காங்கு கற்கள் மாற்றப்பட்டு வைக்கப்பட்டுள்ள துண்டுக் கல்வெட்டுகளும் உள்ளன.

இங்கு 2 வட்டெழுத்துக் கல்வெட்டுகளும், இக்கோயிலுக்கு வடபுறம் உள்ள அங்காளம்மன் கோயிலில் ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டும் உள்ளது. திருத்தளிநாதர் கோயிலுக்குத் தெற்கிலுள்ள பூமாயி அம்மன் கோயிலில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் இருந்தவற்றைக் கோயில் புதுப்பிப்பதற்காக அகற்றியுள்ளனர். மற்றும் வாணியங்கோயில், அனுமார் கோயில், முனீஸ்வரர்

கோயில் ஆகியவற்றில் துண்டுக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

திருப்புத்தூரில் உள்ள கல்வெட்டுகளில் வட்டெழுத்து, தமிழ், கிரந்தம் ஆகிய எழுத்துகள் காணப்படுகின்றன. திருத்தளிநாதர் கோயிலில் உள்ள பழமையானதாகக் கருதப்படும், கருவறையின் வடக்கில் உள்ள கல்வெட்டில் குறில்களுக்கும், ஒற்றெழுத்துக்கும் புள்ளி காணப்படுகிறது. இதே போல, வட்டெழுத்துகளிலும் புள்ளிகள் காணப்படுகின்றன.

காலத்தால் முற்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டுகள் தனிக்கற்களில் பொறிக்கப்பட்டவை.

திருப்புத்தூரில் பாண்டியர், சோழர், விஜயநகரர் ஆகியோருடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை கி.பி. 9 ஆம் நூற்றாண்டு முதல் 16 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரையிலான காலத்தைச் சேர்ந்தவையாகும்.

இக்கல்வெட்டுகளில் குறிக்கப் பெறும் ஊர்களுள் திருக்கொடுங்குன்றம் என்பது பிரான்மலை எனவும், நியமம்-நேயம் எனவும், திருவிராயீசுவரம்-திருவாலீசுவரம் எனவும் வழங்கப்பெறுகின்றன. காரையூர், நெடுமறம், அழகாபுரி, சதுர்வேதிமங்கலம், திருக்கோட்டியூர், திருபுவனம், சிறுவயல், பொன்னமராவதி, கூத்தலூர் போன்ற ஊர்கள் இன்னும் இதே பெயர்களால் அழைக்கப்படுகின்றன.

**பிற ஊர்க் கல்வெட்டுகளில் திருப்புத்தூர்**

திருப்புத்தூர் அருகிலுள்ள நகரத்தார் வயிரவப்பட்டியில் ஒரு கல்வெட்டு வயல் நடுவே உள்ளது. இதில் திருப்புத்தூரும், திருத்தளிநாதர் கோயிலும் குறிக்கப்பட்டுள்ளது. விஜய நகர ஆட்சிக்கு பாண்டிநாடு உட்பட்டிருந்த காலத்தில் இச்சக்குடி என்றும் கிராமத்தை திருத்தளிநாதர் கோயிலுக்கு வெங்கல நாயக்கன் என்பவன் மானியமாகக் கொடுத்ததைக் கூறுகிறது.

வைணவத் தலமான திருக்கோட்டியூரில் திருப்புத்தூர் சீர்மை குறிக்கப்படுகிறது. பெரிச்சிக் கோயில் என்னும் ஊரில் உள்ள கல்வெட்டொன்றும் திருப்புத்தூரைக் குறிக்கின்றது.



திருநெல்வேலி திருவாலீசுவரம் சிவன் கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்றில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் சடைய வர்மன் குலசேகர பாண்டியன் காலத்தில் திருப்புத்தூர் குறிப்பிடப்பட்டுள்ளது.

கி.பி. 12 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலிருந்து பைரவர் அறியப்படுகிறார். பைரவர் வழிபாடு இங்கு சிறப்புற்றிருந்தது. பைரவர் ஆண்ட பிள்ளையார் என்றும் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகிறார்.

நூல் ஆதாரம்: திருப்புத்தூர், தொல்பொருள் ஆய்வுத் துறை, தமிழ்நாடு

**கல்வெட்டு தொடர்பான செய்திகள் தரும் இணையதளங்கள்**

ta.wikipedia.org/wiki/கல்வெட்டு



# யோக பைரவம்

பரமனை மதித்திடாப் பயங்காயாசனன்
ஒரு தலை கிள்ளியே ஒழிந்த வானவர்
குருதியும் அகந்தையும் கொண்டு தண்ட முன்
புரிதருவடுகனைப் போற்றிச் செய்குவாம். – கச்சியப்ப சிவாச்சாரியார்

சிவபெருமானின் ஐந்து குமாரர்களில் பைரவரின் சிறப்பும் ஒன்றாகும். ஆதிசங்கரரின் அறுவகைச் சமயத்தினிலும் ஊடுருவி நிற்கும் பான்மை கொண்டது. புறச் சமயங்களாக விளங்கும் பௌத்தம், சமணம் போன்றவற்றுள்ளும் பைரவ வழிபாடு சிறப்பாக மிளிர்கிறது. எல்லா உலகுக்கும் அப்பாலோன், இப்பாலாய் நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கும் நிலையினையே பைரவம் (பைரவர்) என சிவாகமங்களும், வேதங்களும் திருமுறைகளும் சாத்திரங்களும் புராணங்களும் புகழ்ந்தேத்துகின்றன.


கவிஞர் சிவபாரதி

பைரவர் எனும் சொல்லின் எழுத்துக்களே மிக நுட்பமான ஆழ்ந்த பொருளைத் தருகிறது.

பைரவர் என்ற சொல்லின் ஒலிகள், அதன் வேர்ச்சொற்கள் பரவ – இவற்றுள் ப – என்பது பரணம், ர – என்பது ரவணம், வ – என்பது வமநம்.

பரணம் – நிலை நிறுத்தல், ரவணம் – உலகினை ஒடுக்கல் (அழித்தல்) வமநம் – படைத்தல் – எனும் முப்பொருளின் விளக்கமாக அது திகழ்கின்றது. ஆதிசங்கரரின் சௌந்தர்ய லஹரியில் 41 வது சுலோகத்தில் காலாக்னிருத்ரனால் மஹாப்ரயத்தில் பஸ்பமாக்கப்பட்ட உலகத்தை, மீண்டும் உண்டு பண்ணுகின்ற காரணத்திற்காக அம்பிகை ஆனந்த பைரவியாகவும் எம்பெருமான் ஆனந்த பைரவராகவும், தாண்டவமாடிக் கொண்டு, ஜெகத் சிருஷ்டியே பைரவரால் நடக்கிறது என்று கூறுகிறார். ஆனந்தபைரவர் – படைப்பு காலாக்கினி பைரவர் – ஒடுக்கம் (அழித்தல்), கால பைரவர் – காத்தல்.

ஆக்கல், அழித்தல், அளித்தல் (காத்தல்) இம்மூன்றிற்கும், பைரவரே என்பதை மூல நூல்கள் முன்னிறுத்துகின்றன.

**அவதாரம்**

பிரமேனின் சிரசேதம் (அகந்தையை) அழிப்பதற்கே பைரவ அவதாரம் நிகழ்கிறது.

"அறுத்தான் அயன் தன் சரம் ஐந்திலும் ஒன்றை"
என்று ஞான சம்பந்தப் பெருமானும்
விளங்கமலர் அயன் சிரங்கள் ஐந்தில்
ஒன்றைச் சேதியனை" என்று வாகீசரும் பாடுவதைக் காணலாம்.

அட்டவீரட்டத் தலங்களில் ஒன்றான திருக் கண்டியூரில் தான் பிரம்மனின் சிரம் ஒன்று கொய்யப்படுகிறது பைரவரால். அப்போது பிரம்ம கபாலம் பைரவரின் கரங்களிலேயே ஒட்டிக் கொள்கிறது. கபால பைரவர் காசிக்குச் சென்றவுடன் அந்தக் கபாலம் மறைந்து விடுகிறது. பிரம்ம சிர சேதி மூர்த்தியாக அவதாரம் எடுத்த பைரவர் காசியம்பதியில் கால பைரவராக அருள் பாலிக்கிறார்.

பைரவர் வழிபாட்டை யோக மார்க்கம் என்று புகழ்கிறது பைரவ கல்பம் என்று நூல். விஞ்ஞானத்தையும் நன்னெறியையும் காட்டுபவர் பைரவர் என விஞ்ஞான பைரவம் என்ற நூல் வர்ணிக்கின்றது. வீரம், கல்வி, ஞானம், தனம் என்பனவற்றிற்கு சிறந்த மார்க்கம் பைரவ வழிபாடுதான். சம்ஹாரமூர்த்தியாக இருந்தாலும் பைரவர் வழிபாட்டை யோக வழிபாடு என்று ஆன்றோர்கள் புகழ்கின்றனர். அனைத்து சிவாலயங்களிலும் பைரவர் திருவுருவம் இருக்கும் பைரவர் க்ஷேத்ர பாலகர் என்றும் அழைக்கப்படுகிறார். க்ஷேத்திரம் என்றால் ஊர். பாலகன் எனில் இளைஞன், ஊரையும் கோவிலையும் உலகையும் காக்கும் தெய்வம் அவரே. பைரவ மூர்த்தத்தில் 64 பைரவர்கள் உண்டு என்று ஆகமங்கள் கூறுகின்றன. (அட்டவணை பார்க்கவும் பக்கம்.....) அவற்றுள் எட்டு வகையான பைரவர்கள் சிறப்பாகப் பேசப்படுகின்றனர்



1. அசிதாங்க பைரவர்
2. ருரு பைரவர்
3. சண்ட பைரவர்
4. குரோதன பைரவர்
5. உன்மத்த பைரவர்
6. கபால பைரவர்
7. பீண பைரவர்
8. சம் ஹார பைரவர்

என்பவை ஆகும். இந்த அறுபத்து நான்கு பைரவ கோலங்களிலும், ஏன் எட்டு பைரவர்களிலும் மாறுபட்டு விளங்குகிறார் நம் திருப்புத்தூரில் உள்ள யோக பைரவர். பைரவர் எனும் தோற்றத்திற்கான நாய், கபாலம், சூலம் என்பவை இல்லை என்பதால், இவர் பைரவரே இல்லை என்று கூறமுடியாது. திருவாடுதுறை ஆதீன வெளியீடான பைரவர் என்ற நூலில் நம் யோக பைரவர் ஆண்ட பிள்ளையார் உலகை ஆண்ட பிள்ளையார் என்றே அழைக்கப்பட்டிருக்கிறார். அதற்கான கல்வெட்டு ஆதாரங்கள் நம் ஆலயத்தில் இருக்கின்றன. ஆதிவிநாயகர் என்ற விநாயகர், யான்முகமன்றி, நாமுகக் கோடே இருக்கிறார். அதேபோல, பைரவரின் தோற்றம் ஆதியில் இப்படித்தான் இருந்திருக்கவேண்டும்.

**யோக பைரவரின் - சிறப்பு**

பூதக கணங்களின் அதிபதியாக, பூதநாதனாக இருக்கும் பைரவர் காலச்சக்கரத்தை செவ்வனே காசியம்பதியில் சுழற்றிக் கொண்டிருந்தபோது ஞான நிலை காண எண்ணங் கொள்கிறார். எந்த ஓர் அவதாரமும், அதர்மத்தை அழித்து, தர்மத்தை நிலைநாட்டவே நிகழ்கிறது. அப்போது, அதர்மமான அந்த உயிர் அழிக்கப்படுவதால், (அது, தேவர்களையோ, அசுரர்களையோ) அழித்தல் தொழிலைச் செய்யும் அவதாரங்களுக்கும் பிரம்மஹத்தி தோஷம் (அவை - கடவுளின் அவதாரங்களே ஆயினும்) பிடிப்பதாக புராண, இதிகாசங்கள் தெரிவிக்கின்றன. (காசி காண்டம் - பைரவப் பிரபாவத்தில்) அந்த தோஷ நிவர்த்திக்காக, சிவ பூஜை செய்து தோஷங்களை நிவர்த்தி செய்து கொள்வதுண்டு. பிரம்ம சிரச்சேதத்திற்குப் பிறகு சிவபூஜை செய்ய வேண்டும் என்ற எண்ணம் கால பைரவரை ஆட்கொள்கிறது. பைர அரவம் சூடிய எம்பெருமான் கயிலை நாதன் கொன்றைவனமே நீ தவம்புரிய பூஜை செய்ய ஏற்ற இடம் என்று தெரிவிக்க, காசியம் பதியில் இருந்து வில்வபத்ரம் ( இன்றும் - இங்கே காசிவில்வம் என்று அழைக்கப்படுகிறது). கொணர்ந்து பூஜை செய்து, தன் கோர நிலையை விடுத்து, யோக நிலையில் அமர்ந்து யோக பைரவராக அருளாட்சி செய்கிறார்.

கௌரிக்காகத் தாண்டவமாடிய, கௌரி தாண்டவ, லெட்சுமி தாண்டவ, பெருமானின் வடபால் சர்வ சித்தி பூமி எனும் இடத்தில் மேற்கு முகமாக தனிச்சந்நிதி கொண்டுள்ளார். பாதம் இரண்டையும் பிணைத்து பெருவிரலால் பூமியில் ஊன்றிய கோலத்தில் இருகாற் குதிரையையும் சகனத்தில் வைத்துக் கொண்டு ஜடாமகுடம், நுதல் விழியில் (நெற்றிக்கண்) அக்னியை ஒடுக்கி, காதுகளில் சுருள் தோடும் உத்பலமும் உடையவராய் வக்கிர தந்தங்களும், புன்னகை ஒளிர்கின்ற முகமும் கொண்டு, வலக்கரத்தில் இடியை ஏந்தி இடக்கரத்தை வாம தொடையில் வைத்து கொண்டு, சூழமுனை வழியாக (கால்) அக்னியை எழுப்பி யோக நிலையில் வீற்றிருந்தருளச் செய்யும். இந்தக் கோலமுடைய யோக பைரவரை உலகில் வேறு எங்கும் காணமுடியாது என்பதை அறுதியிட்டுக் கூறலாம். இதுதான் இத்தலத்திலே உள்ள மிக மிக சிறப்பான அம்சமாகும். மேலும், ஸ்ரீ யோக பைரவருக்கு எதிரே மூன்றாம் பிரகாரத்தில் உள்ள பைரவ எந்திரம் உடைய மேருபீடம் வேறு எங்கும் இல்லாதது. இவை இங்கு மட்டுமே காணக் கூடிய சிறப்பம்சம். மதுரைப் பகுதியில் இருந்து வருகிறேன் என்று காஞ்சி பரமாச்சார்யார் ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி சுவாமிகளிடம் தெரிவித்தால் திருப்புத்தூரில் பைரவர் மேருவை தரிசித்தாயா? என்று கேட்பாராம்.

இந்த யோக பைரவரில் இருந்து தான் அஷ்ட பைரவர்களான

அசிதாங்க பைரவர், உருபைரவர், சண்ட பைரவர். குரோதன பைரவர், உன் மத்த பைரவர், கபால பைரவர், பீண பைரவர், சம்ஹார பைரவர்கள் தோன்றி இருக்க வேண்டும் என்ற கருத்து நிலவுகிறது. இவரே ஆதி பைரவர் என்பதால் எந்தச்


ஜெயந்தன்

செயலும் சாந்தி (அமைதி நிலையில் உருக்கொள்ளும் போதே நோக்கம் நிறைவு பெறும் என்பது உண்மை அல்லவா. ஆதிமூலத்தை அணுகி அருள் பெறுவோம்.

**ஜெயந்தன் - சாப விமோசனம்**

தேவேந்திரன் மகன் ஜெயந்தன் சத்யகிரி என்ற மலைக்கு தன் கந்தர்வ நண்பனைக் காணச் செல்கிறான். அங்கே இருந்த ஒரு குகையில் உள்ள ஆசிரமத்தில் வீணாகானமான ஒரு நாதம் கேட்கிறது. அதில் மயங்கிய ஜெயந்தன் அந்தக் குகைக்குள் செல்கிறான். அது கௌன முனிவரின் பத்தினியின் குரல் (நாதம்), அதைப் பற்றிக் கந்தர்வ நண்பன் கூறியும் காம வேட்கையால், குகையின் வாயிலை ஒரு குன்றால் (பாறை) அடைத்துவிட்டு உள்ளே செல்கிறான். அதைக் கண்ட கௌன முனிவர் ஜெயந்தனின் காம எண்ணத்தைப் புரிந்து கொண்டு அவனுக்குச் சாபமிடுகிறார். கோபம் கொண்டு "நீ பூதமாக மாறி, நீ அடைத்த குன்றும் இடியும் உன்னைச் சேரட்டும்!" எனச் சாபமிடுகிறார். உடன் அது நிகழ்கிறது. ஜெயந்தன், தான் செய்த தவறுக்கு வருந்தி மன்னிப்புக் கோர, "கொன்றை வனத்தில் நீ யோக பைரவரைத் தரிசிக்கும்போது இவை உன்னை விட்டு விலகி நீ சுயரூபம் அடைவாய்!" என்கிறார்.

பல காலம் சுற்றித் திரிந்த ஜெயந்தன், இங்கு வந்து நம் யோக பைரவரைத் தரிசிக்கும்போது பூத உருவம் நீங்கி மலை தூரச் சென்று விழுகிறது. இடியோக பைரவரின் வலக்கரத்தில் சேர்கிறது. ஜெயந்தன் வழிபட்டு சாப விமோசனம் அடைந்த நாளே, சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை அதை இன்றும் நாம் ஜெயந்தன் பூஜை என்று கொண்டாடுகிறோம். யோக பைரவரின் வீதியுலா குதிரை வாகனத்தில் அன்று மட்டும் வருடத்திற்கு ஒரு முறை நடைபெறுகிறது.

**பைரவர் ஆண்ட பிள்ளையார்** (தரவு: டாக்டர் இரா. கலைக்கோவன்)

திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயில் வளாகத்திலுள்ள பைரவர் கோயில் கல்வெட்டுகள் பைரவர் கல்வெட்டுகளில் ஆண்ட பிள்ளையார் என்று அழைக்கப்படுகிறது. இப்பைரவர் திருமேனியும், கோயிலும் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இவ்வளாகத்தில் இருப்பதைக் கல்வெட்டுகள் உறுதிசெய்கிறது. இது இரண்டாம் பாண்டியப் பேரரசுக் காலம்

**1. சடையவர்மன் வீரபாண்டியன்**

பைரவர் திருமுன்னுக்கு முன்னாலுள்ள மண்டபம் அவனி நாராயணன் மண்டபம் என்றழைக்கப் பெற்றது. திருப்புத்தூர் மூலபருடைச் சபை இம்மண்டபத்துக் கூடியிருந்து திருத்தளிநாதர் கோயிலுக்குத் தரப்பட்ட கொடைகளை ஏற்றனர். இக்கொடையில் ஆண்ட பிள்ளையாரின் படையலுக்கான முதலும் இடம்பெற்றுள்ளது.

**2. இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்: கி.பி. 1240**

அய்யன் மழவராயன் மன்னரின் பரிந்துரைக்க மன்னர் ஆணை. கீழ்ச்செம்பி நாட்டுக் கீழைக் கொடுமலூரான மதுரோதய நல்லூரைச் சேர்ந்த அரையன் திருநாடுடையான் ஆன நிலகங்கரையன் கல்வாயில் நாட்டு அருவலம் எனும் கிராமத்தைக் கங்கேயனிடமிருந்து வாங்கி ஆண்ட பிள்ளையாருக்கான படையல்களுக்குக் கொடையளித்தார். இதற்கான வரியினங்களை மன்னர் தள்ளுபடி செய்தார். இக்கல்வெட்டில் காளையார் கோலன் என்னும் பெயருடைய நலமளந்த கோல் சுட்டப்படுகிறது.

**4. இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன்: கி.பி. 1245**

கோயில் தானத்தார்க்கு மன்னர் ஆணை. பரிந்துரைத்தவர் அய்யன் மழவராயன். அதலையூர் நாட்டுத் திருச்சம்மணமழகிய நல்லூரைக் காங்கேயன் ஆண்ட பிள்ளையாருக்கான வழிபாட்டிற்குத் தந்திருக்கிறார். இதன்மீதான சில வரியினங்களை மன்னர் தள்ளுபடி செய்தார்

**5. குலசேகரன்: கி.பி. 1291**

பூங்குன்ற நாட்டுக் கட்டி ஏரி எனும் கிராமத்தின் காரான்கிழமை உரிமை ஸ்ரீராமதேவன் தயாபரன் என்பார்க்குக் கண்டன் ஆளுடையானான கல்வாயில் நாடாழ்வான் என்பாரால் விற்றுத் தரப்பட்டது. இக்கிராமத்திற்கான வரியின்ங்கள் ஆண்ட பிள்ளையார் கோயிலுக்குத் தரப்படவேண்டும் என்பது விற்றவரிட்ட நிபந்தனை.

**6. குலசேகரன்**

மாளவச் சக்கரவர்த்திகளான மும்முடிச் சோழன் மாளவர் மாணிக்கம் பூங்குன்ற நாட்டு நிலங்கள் சிலவற்றைத் தன் பிறந்த நட்சத்திரமான மகத்தின்போது ஆண்ட பிள்ளையாருக்குப் பஞ்சகவ்விய முழுக்காட்டுச் செய்யவும் படையலுக்குமாய்த் தேவதானமாகக் கொடையளித்தார்.

**7. வீரப்பிரதாப அச்சுததேவமகாரயர்**

விளம்பிய ஈண்டு - அரசரின் நலத்திற்காகப் பெரிய ராமப்ப நாயக்கர் பைரவர் கோயிலுக்கு நிலக்கொடை

**8. சுந்தர பாண்டிய தேவர்**

அழகிய வாகனார் பிரானான வாணவன் பிரமாதராயர்க்கு கண்டன் உதையஞ் செய்தானான காங்கேயன் பிரமாதராய நாட்டுக் குடிகாடான மாளவ கற்பக நல்லூரைக் காராண்மையாக விற்றுத் தந்தார். இந்நிலத்திற்கான வரியினங்கள் கொண்டு காங்கேயனின் நலத்திற்காக ஆண்ட பிள்ளையாருக்கு ஒரு சந்தி வழிபாடு அமைக்கப்பட்டது. இக்கல்வெட்டு அக்காலத்து நிலமளக்கும் கோலாகப் பதினெண் சாண் கோலைக் குறிக்கிறது.

**9. சுந்தர பாண்டிய தேவர்**

கண்டன் உதையஞ் செய்தானான காங்கேயன், வடதலைச் செம்பிய நாட்டக் கீழைக் கொடுமளூரான மதுரை உதையநல்லூர் அரையன் திருநாவுடையானான நீலகங்கரையர்க்குக் காராண்மையான நில விற்பனை இந்நிலை வரியினங்கள் கொண்டு காங்கேயன் நலத்திற்காக ஆண்ட பிள்ளையார் திருமுன்னில் ஒரு சந்தி வழிபாடு அமைக்கப்பட்டது.

**10. மாறவர்மன் சுந்தரபாண்டியன்: கி.பி. 1228**

கண்டன் ஆளுடையானான காங்கேயன், தான் காராண்மையாகக் கொண்ட நிலத்திற்கான வரியினங்களை ஆண் பிள்ளையார்க்குத் திருப்படிமாற்று உள்ளிட்ட நித்த நிவந்தங்களுக்கு நீர்வார்த்துத் தந்தார்.

இப்பத்து மன்னர்களுள் ஒன்பதின்மர் இரண்டாம் பாண்டியப் பேரரசுக் காலத்தைச் சேர்ந்தவர்கள். ஒருவர், வீரப்பிரதாப அச்சுத தேவ மகாராயர் விஜய நகர மன்னர். சிலர் கல்வெட்டுதான் ஆண்ட பிள்ளையாரை முதன் முதலாகப் பைரவர் என்று குறிப்பிடுகிறது. பாண்டியர் காலத்தில் இக்கோயில் ஆண்ட பிள்ளையார் கோயிலென்றே அழைக்கப்பட்டது.

# ஓங்காரம் தரும் ஐஸ்வர்யங்களும் அதன் கொன்றை மர அவதாரமும்



ஓங்காரம் என்பது சகல ஐஸ்வர்யங்களையும் தரக்கூடியது. ஐஸ்வர்யம் என்றால் வெறும் பொன்னும் பொருளும் மட்டும் அல்ல. ஒரு ஜீவன் இறைநிலையிலேயே தோன்றி, வளர்ந்து அதனுள் ஐக்கியமாவதற்குத் தேவையான அனைத்துப் பொருட்களையும் திரவியங்களையும் பெறுவதே ஐய்வர்யக் கடாட்சம் ஆகும். இவ்வகையில் ஓங்காரப் பிரணவமூர்த்தியானவர் தன்னைப் பரப்பிரம்மத்தின் சொருபமாக உணர்த்த வேண்டித் தவம் புரிவதற்கான புனிதமான ஸ்தலத்தைத் தேடி வருகையில்தான் ஸ்ரீ மகாலட்சுமி தேவியின் கருணை கடாட்சம் நிறைந்ததும் சகல ஐஸ்வர்யங்களும் பொருந்திய ஸ்தலமான திருப்புத்தூரை வந்தடைந்தார்.

சிவகங்கை மாவட்டத்தில் காரைக்குடி - மதுரைச் சாலையில் உள்ளதே திருப்புத்தூர் பெருநகரமாகும். இவ்விடத்தில்தான் ஓங்காரப் பிரணவ மூர்த்தி பெருந்தவம் பூண்டுத் தன்னை வழிபடுவோர்க்கெல்லாம் சர்வேஸ்வரனாக, சர்வேஸ்வர தத்துவமாக, பரப்பிரம்மத் தத்துவமாக அனைத்தையும் உணர்த்தி நிற்கின்ற பெருவரத்தைத் தந்தருளும் பாக்கியத்தைப் பெற்றார். இவ்விடத்தில்தான் இன்றைக்கும் ஸ்தல விருட்சமாக ஓங்காரப் பிரணவமூர்த்தியே கொன்றை மரமாக வீற்றிருக்கின்றார். இதுதான் கலியுகத்தில் நாம் கண்ணால் காணக்கூடிய ஓங்காரத்தின் சொருபம்.

ஓங்காரத்தின் ஒளிப்பிரகாசமான சொருபத்தைக் காணும் சக்தியை நாம் பெறவில்லை என்றாலும் ஓங்காரம் நம் கண்ணுக்குத் தெரிகின்ற வகையிலே ஒரு ஜீவனாக மரமாக, செடியாக, கொடியாக அமைந்திருப்பது நமது பாக்கியம்தானே.

ஓங்காரப் பிரணவத்தை நாம் உய்த்து உணரும் பொருட்டுத்தான் இத்திருப்புத்தூர் திருத்தளிநாதர் சிவாலயத்தில் ஓங்காரமே கொன்றை மர ரூபத்தில் நமக்குக் காட்சி தருகின்றது. இந்தக் கொன்றை மரத்தை நீங்கள் தரிசித்தீர்களானால் நிச்சயமாக உறுதியுடன் நீங்கள் ஒன்றை சொல்லிக் கொள்ளலாம். நான் ஓங்காரத்தை, ஓங்கார ரூபத்தை தரிசித்துவிட்டேன் என்று இதனை ஆழ்ந்த நம்பிக்கையுடன் உணர்வீர்களேயானால் நிச்சயமாக உங்களுக்கு ஓங்கார மகிமையின் தத்துவம் புரியலாகும்.

வாழ்க்கையில் கிடைத்தற்கரிய பாக்கியம் இது. இக்கொன்றை மரத்தை வலம் வந்து ஓங்காரத்தை ஓதியவாறே அடிப்பிரதட்சிணம் செய்து இங்கு தர்ப்பைப் பாயில் அமர்ந்து ஓங்காரத் தியானத்தைச் செய்து வந்தால் நிச்சயமாக ஓங்காரத்தின் தன்மை இறையருளால் புரியலாகும். ஏனென்றால், ஓங்காரப் பிரணவமூர்த்தியே ஓங்காரத்தை உணர்த்துகின்ற உத்தமத் திருத்தலம் அல்லவா! கலியுகத்தில் கிடைத்தற்குரிய ஸ்தலம் இது. இதனுடைய பெருமையை உணர்ந்த கோடானுகோடி தேவர்கள் எல்லாம் இன்றும் ஓடோடி வந்து வழிபடுகின்ற உத்தமத் திருத்தலம் ஆகும்.

## திருப்புத்தூர் அருள்தரு சிவகாமி அம்மை உடனாய அருள்தரு திருத்தளிநாதர் திருக்கோயில் சிறப்புகள்

**மரு. பரமகுரு,**
குன்றக்குடி

- இறைவன் : திருத்தளிநாதர், புத்தூரீசர்
- இறைவி : சிவகாமி அம்மையார்
- தீர்த்தம் : திருத்தளித் தீர்த்தம், சிவகங்கை
- தலவிருட்சம் : கொன்றை
- தேவாரம் பெற்ற பாண்டி பதினான்கு திருத்தலங்களில் ஒன்றாகும்.
- அப்பரடிகளாலும், திருஞானசம்பந்தராலும் பாடப் பெற்றது.
- சுந்தரமூர்த்தி நாயனார் வழிபட்ட திருத்தலம்
- திருஞான சம்பந்த சுவாமிகளுடன் சேர்ந்து மங்கையர்க்கரசியார், குலச்சிறையார், நின்ற சீர் நெடுமாற நாயனார் ஆகியோரும் வந்து வழிபட்ட திருத்தலம்.
- அருணகிரி நாத சுவாமிகளின் திருப்புகழ்ப் பாடல் பெற்ற முருகன் எழுந்தருளியுள்ள திருத்தலம்.
- யோக பைரவர் கண் கண்ட தெய்வமாய் எழுந்தருளியுள்ள திருத்தலம்.
- இத்திருக்கோயிலை 'ஓங்கு கோயில்' என்று திருஞானசம்பந்தரும், இத்திருத்தலத்தில் இலக்குமி தேவி கண்டு வழிபட்டுப் பேறு பெற்றார் என்பது தலபுராணம்.
- இங்கு சிவபெருமான் கௌரி தாண்டவம் ஆடியருளியதால் இத்திருத்தலம் தென்சிதம்பரம் எனப் போற்றப் பெறுகிறது. இத்திருக்கோயில் கி.பி. 7 ஆம் நூற்றாண்டுப் பழமையானது.
- கருவறை விமானம் 'நாகர' அமைப்புடையது. இக்கோயில் அதிட்டானத்திலிருந்து விமானம் வரை கல்லால் ஆனது.
- கருவறை தவிர திருக்கோயிலின் பிற பகுதிகள் பிற்காலப் பாண்டியர்கள் காலத்திலும், மருது சகோதரர்களாலும் திருப்பணி செய்யப் பெற்றவை. சிற்பச் சிறப்புடையது
- சீதளி தீர்த்தக் குளம் திருக்கோயில் மொத்தப் பரப்பளவு 17 ஏக்கர் 72 செண்டு ஆகும்.
- கி.பி. 1484 இல் திருவம்பலமுடையார் மறைஞானச் சம்பந்தரால் இத்திருக்கோயில் தலபுராணம் இயற்றப் பெற்றதாகக் கல்வெட்டுச் செய்தியால் அறியப்படுகிறது. அந்தப் புராணம் கிடைத்திலது. ஆனால், 19 ஆம் நூற்றாண்டில் ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியார் என்பவரால் பாடப்பெற்ற தலபுராணம் உள்ளது.
- நாள்தோறும் காமிகாமப்படி நாட்பூசை நடைபெற்று வருகிறது.
- ஆண்டுதோறும் வைகாசிப் பெருந்திருவிழா நடைபெற்று வருகிறது.
- கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் ஆண்ட பாண்டியன் மாறன் சடையனாகிய வரகுணனின் காலத்தியக் கல்வெட்டுகள் இரண்டு தனிக் கற்களில் இங்குள்ளன. அவற்றில் ஸ்ரீதளி, திருத்தளி என்று இக்கோயில் குறிக்கப் பெறுகிறது.
- வரலாற்றுச் சிறப்பும் புராணச் சிறப்பும் உடைய திருத்தலங்களில் இத்திருப்புத்தூர்த் திருத்தலமும் ஒன்றாகும்.

- இரண்டாம் திருச்சுற்றின் வடக்கில் பைரவர் தனிக்கோயிலில் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.
- இக்கோயில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் அமைந்தது எனக் கல்வெட்டுகளால் அறியப்படுகின்றது.
- இக்கோயில் முன்மண்டபம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் சிவகங்கைச் சீமையை ஆண்ட மருதுசகோதரர்களால் கட்டப் பெற்றது.
- இந்த மூர்த்தி யோக பைரவமூர்த்தி.
- வேண்டுவார் வேண்டுவது ஈயும் தெய்வம் என இவர் போற்றப்படுகிறார்.
- வறுமை, பிணி நீக்கம், கல்வி, செல்வம், குழந்தைப் பேறு முதலியன வழங்கியருளும் அற்புதத் தெய்வம்.
- விஜயநகரப் பேரரசன் வீரப்பிரதாப அச்சு தேவ மகாராயர் நன்மை கருதி, பெரிய ராமப்ப நாயக்கர் இந்த பைரவருக்கு நிலம் அளித்துள்ளார்.
- பெரியராமப்ப நாயக்கருக்கு நன்மை உண்டாகும் பொருட்டு நிலம் வழங்கப்பட்டது.
- கிருஷ்ண தேவராயர் காலத்து வீர நரசிம்மராய நாயக்கரான செல்லப்பர் நன்மைக்காக திருப்புத்தூர் உடையார் சிங்கமநாயக்கனால் நிலம் வழங்கப்பட்டது.
- நாகம நாயக்கர் மகனான விசுவநாத நாயக்கர் நன்மைக்காக ஒரு கிராமம் (வரகுணபுத்தூர்) வழங்கப் பெற்றது.

என்னும் கல்வெட்டுச் செய்திகள் நாயக்க மன்னர்களும், அதிகாரிகளும் இந்த பைரவசுவாமி மீது கொண்டிருந்த அசைக்க முடியாத பக்தியையும், நம்பிக்கையையும் உலகிற்கு உணர்த்திக் கொண்டிருக்கின்றன.

- திருப்புத்தூர் மக்களும் சுற்றியுள்ள கிராம மக்களும் பைரவருக்கு பல வகையில் மிகச் சிறப்பாக நேர்த்திக் கடன் செலுத்தி வருகிறார்கள்.
- ஆண்டுதோறும் சித்திரை மாதம் முதல் வெள்ளிக் கிழமை இப்பெருமானுக்கு ஜெயந்தன் பூசை மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.
- ஆண்டுதோறும் கார்த்திகை மாதம் சம்பக ஷஷ்டி விழா சிறப்பாக நடைபெற்று வருகிறது.

# அர்ச்சனையும், மலர்களும்



- விநாயகரை துளசியால் அர்ச்சனை செய்யக் கூடாது!
(விநாயகர் சதுர்த்தியன்று மட்டும் ஒரு இலை போடலாம்)
- பரமசிவனுக்குத் தாழம்பூ உதவாது, தும்பை,வில்வம், கொன்றை முதலியன விசேசம். ஊமத்தை , வெள்ளெருக்கு ஆகியவற்றாலும் அர்ச்சனை செய்யலாம்.
- விஷ்ணுவை அட்சதையால் அர்ச்சனை செய்யக்கூடாது.
- பவளமல்லியால் சரஸ்வதியை அர்ச்சனை செய்யக் கூடாது.
- துலுக்க சாமந்திப்பூவைக் கண்டிப்பாக உபயோகப்படுத்தக் கூடாது.
- மலரை முழுவதுமாக அர்ச்சனை செய்ய வேண்டும்.
இதழ் இதழாகக் கிள்ளி அர்ச்சனை செய்யக் கூடாது.
- வாடிப்போன, அழுகிப்போன, பூச்சிகள் கடித்த மலர்களை உபயோகப்படுத்தக் கூடாது.
- அன்று மலர்ந்த மலர்களை அன்றைக்கே உபயோகப்படுத்த வேண்டும்.
- ஒரு முறை இறைவன் திருவடிகளில் சமர்ப்பிக்கப்பட்ட மலர்களில் எடுத்து மீண்டும் அர்ச்சனை செய்யக் கூடாது வில்வம், துளசி ஆகியவற்றை மட்டுமே மறுபடி உபயோக்கலாம்,
- தாமரை, நீலோத்பவம் போன்ற நீரில் தோன்றும் மலர்களை தடாகத்திலிருந்து எடுத்த அன்றைக்கே உபயோகப்படுத்த வேண்டும் என்கிற விதியில்லை.
- வாசனை இல்லாதது; முடி, புழு ஆகியவற்றோடு சேர்ந்திருந்தது; வாடியது; தகாதவர்களால் தொடப்பட்டது; நுகரப்பட்டது; ஈரத்துணி உடுத்திக் கொண்டு வரப்பட்டது; காய்ந்தது; பழையது; தரையில் விழுந்தது; ஆகிய மலர்களை அர்ச்சனைக்கு உபயோகப்படுத்தக் கூடாது.
- சம்பக மொட்டுத் தவிர வேறு மலர்களின் மொட்டுகள் பூஜைக்கு உகந்தவை அல்ல.
- மலர்களைக் கிள்ளி பூஜிக்கக் கூடாது!
- முல்லை, நொச்சி, வில்வம், விளா இவை பஞ்ச வில்வம் எனப்படும் . இவை சிவபூஜைக்கு உரியவை.
- துளசி, முகிழ் (மகிழம்) சண்முகம், தாமரை, வில்வம், செங்கழுநீர், மரிக்கொழுந்து, மருதாணி, தர்ப்பம், அருகு, நாயுருவி, விஷ்ணுக்ராந்தி நெல்லி ஆகியவற்றின் இலை பூஜைக்கு உகந்தவை.
- பூஜைக்குரிய பழங்கள்: நாகப்பழம், மாதுளை, எலுமிச்சை, புளியம்பழம், கொய்யா, வாழை, நெல்லி, இலந்தை, மாம்பழம், பலாப்பழம்.
- திருவிழாக்காலத்திலும் வீதி வலம் வரும்போதும், பரிவார தேவதைகளின் அலங்காரத்திலும் மற்றைய நாட்களில் உபயோகிக்கத் தகாததென்று விலக்கப்பட்ட மலர்களை உபயோகிக்கலாம்.
- குடுமியுள்ள தேங்காயைச் சமமாக உடைத்துக் குடுமியை நீக்கி விட்டு நிவேதனம் செய்ய வேண்டும்

**திருமறை உலா**

13 ஆம் பக்கத் தொடர்ச்சி

முதன் முதலாக பன்னிரு திருமுறைகளைப் பட்டத்து யானை மேல் வைத்து ஊர்வலமாக எடுத்து வந்து இங்கு அருள்பாலிக்கும் அகத்தியலிங்கத்தின் அருகே வைத்து வழிபட்டதாக கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறுகிறது.

**அகத்தியர் வழிபட்டது :**

தென்னன் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலவன் அகத்தியர் இத்தலத்தில் ஒரு லிங்கத்தை பிரதிஷ்டை செய்து வழிபட்டதால் இது அகத்திய லிங்கம் என இன்றும் அழைக்கப்படுகிறது.

**பழியஞ்சிய படலம்**

பாண்டிய மன்னனின் நெறி வழுவாது செங்கோல் காத்த பழியஞ்சிய படலம் நிகழ்ந்த பதி இத்திருப்புத்தூரேயாகும்.

**சங்கம்-சான்று**

மதுரையில் தமிழ்ச்சங்கம் இருந்தது என்பதற்கான சான்றாக

நன்பாட்டுப் புலவனாய் சங்கம் ஏறி

நற்கனகிழ தருமிக் கருளினோன் காண்.

என்ற நாவுக்கரசர் பாடிய இத்தலத்தின் பாடலே சான்று என ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரியார் பகர்கிறார்.

**அருணகிரி நாதர் வருகை**

வேறு எங்கும் காண இயலாத வடக்கு நோக்கி அருட்சுரக்கும் சுப்ரமணியரை திருப்பத்தூரில் மருவியுறை தரு பெருமாளே என அருணகிரி பாடிப் பரவுகிறார்.

**யோகபைரவர்**

வேறு எங்குமே காணமுடியாத பைரவ வடிவம் இங்கு தான் உள்ளது. பாதம் இரண்டையும் பிணைத்து பெருவிரலை பூமியில் ஊன்றி இருகாற்குதியையும் சகனத்தில் வைத்துக் கொண்டு ஜடா மகுடம், நதல்வழியில் அக்னியை ஒடுக்கிக் காதுகளில் சுருத்தோடும் புன்னகை ஒளிர்கின்ற முகத்துடனும் வலக்கரத்தில் இடிதனைத் தாங்கி, இடக்கரத்தை வம்தொடையில் வைத்துள்ளார். சூழமுனை வழியாக (கால்) அனலை எழுப்பி யோக நிலையில் வீற்றிருக்கும் கோலமுடைய இந்தப் பைரவரை வேறு எங்கும் காண முடியாது.

**திருப்பணிகள்**

தொன்மையான இவ்வாலயத்தின் திருப்பணிகளை நெடிய காலமாக பல்வேறு மன்னர்கள் செய்திருக்கின்றனர். சேர,சோழ,பாண்டிய மன்னர்களும் பல்லவர்கள், நாயக்கர்கள், சேதுபதிகள்,மருதுபாண்டியர்கள், நகரத்தார்கள் எனப் பல்வேறு கட்டடக் கலையும் இவ்வாலயத்தில் இருப்பதை நாம் பார்க்க முடியும். சமீபத்தில் 1992 ம் ஆண்டு அருள் தந்தை தவத்திரு. குன்றக்குடி அடிகளாரால் காலத்தில் சீரமைத்து திருக்குடநன்னீராட்டு விழா நடைபெற்றது. அதன்பிறகு பத்தொன்பது ஆண்டு கழித்து தவத்திரு பொன்னம்பல அடிகளாரின் ஆசியோடு சிறப்பான திருப்பணிகள் செய்து திருக்குடநன்னீராட்டு விழா நடைபெறுகிறது.

# இதுதான் நிஜமான பக்தி!

"கஜேந்திரன் என்னும் யானை தாமரைத் தடாகத்தில் மலர் பறிக்க வந்தது. குளத்தில் இருந்த கூகு என்ற முதலை யானையின் காலினை இழுத்தது. முதலையின் வாயில் சிக்கிக் கொண்ட யானை செய்வதறியாது திகைத்தது. தான் வழிபடும் பெருமாளே கதி என்று நினைத்து ஆதி மூலமே என்று அபயக்குரல் எழுப்பியது. குரலைக் கேட்ட பெருமாள் வைகுண்டத்திலிருந்து கருடன் மீது பறந்து வந்து கஜேந்திரனைக் காப்பாற்றினார்" என்று சொல்லிக் கொண்டிருந்த போது, உபன்யாசத்துக்கு வந்திருந்த பெரியவர் ஒருவர் இடைமறித்தார்.

"பாகவதரே! யானையின் கூக்குரல் வைகுண்டம் வரை எப்படி கேட்கும்? அப்படிக் கேட்டாலும்கூட பெருமாள் உடனே எப்படி அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார்?" என்றார்.

நிகழ்ச்சியை விவரித்துக் கொண்டிருந்த பாகவதருக்கு இதற்கு பதில் தெரியவில்லை. ஏதோ படித்ததையும் கேட்டதையும் கொண்டு கதை சொன்னவர் விழிக்க ஆரம்பித்து விட்டார். உடனே பாகவதரின் மகன் எழுந்தான்.

"ஐயா! உங்கள் கேள்விக்கு பதில் நான் சொல்கிறேன்" என்றான், சிறுவனின் பதிலைக் கேட்க அனைவரும் ஆர்வமாயினர்.

"மக்களே! வைகுண்டம் என்பது எங்கோ வானத்தில் இல்லை. அவரவர் இருக்குமிடமே வைகுண்டம் தான்! அதாவது கூப்பிடு தூரத்தில் வைகுண்டம் இருக்கிறது. பரம்பொருள் எங்கும் நிறைந்திருக்கிறான். நம்பிக்கையோடு அழைத்தால் அவன் உடனே ஓடி வருவான்" என்றான். அனைவரும் இந்த பதிலைக் கேட்டு கைதட்டினர். நம்பிக்கையே பக்தி என்ற உண்மை உணரவைக்கப்பட்டது.

# புண்ணிய பூமி



**ஹபிபுல்லா**

சிவகங்கைச் சீமையில் முதல் இந்திய சுதந்திரப் போராட்டத்திற்கு வித்திட்டு, வீரமுழக்கமிட்டு மருதிருவர்கள் மறைந்த தியாக பூமியாம் திருப்புத்தூர்.

நகர் முழுவதும் ஆங்காங்கே ஆலயங்கள், மசூதிகள்,தேவாலயங்கள் நிறைந்து நிற்கும் ஆன்மிக பூமி.

இந்து, முஸ்லிம், கிறிஸ்தவ ஒருமைப்பாட்டுக்கு உலகிற்கே வழிகாட்டும் உத்தம பூமி.

சமய சாதிச் சண்டைகளைச் சந்திக்காத சரித்திர பூமி.

ஆலய திருவிழாக்காளானாலும், மசூதி நிகழ்வுகளாயினும், பேராலய நிகழ்ச்சிகளாயினும், மதங்களை மறந்து, அனைத்து மக்களும் கலந்து கொள்ளும் மனித நேயத்திற்கு வழிகாட்டும் மகத்தான பூமி.

திருப்புத்தூர் பெரிய கடை வீதியில் ஒரே சுவற்றருகில் பள்ளிவாசலும், கோவிலும் இணைந்திருக்கும் பேரதிசய பூமி.

'ஊர் கூடி தேர் இழுப்போம்' என்ற முதுமொழிக்கு ஒப்ப ஊர் தேர்த் திருவிழாவில் இஸ்லாமியச் சமூகத்தினைச் சேர்ந்த அம்பலத்திற்கு காளாஞ்சி முறை வழங்கிக் கௌரவிக்கும் கண்ணிய பூமி.

திருப்புத்தூர் ஸ்ரீ ராஜகாளியம்மன் கோவில் திருவிழாக் காலத்தினையொட்டி கான்பா சாயபு தர்காவில் புத்தூர் புஷ்ப வியாபாரிகள் சங்கத்தின் சார்பாக சமயம் மறந்து பன்னெடுங்காலமாக விசேட பிரார்த்தனை நடத்தும் வித்தியாசமான பூமி.

ஸ்ரீ பூமாயி அம்மனின் பூச்சொரிதல் விழாவில் சமயம் சாராது அனைத்து விபாயாரச் சங்கங்களும் பங்கேற்று சிறப்பிக்கும் அமைதி பூமி.

ஆலயம் எதுவானாலும், அதில் நடைபெறும் சுபநிகழ்வுகள் எதுவாயினும் அனைத்து சமய மக்களும் பங்கேற்கும் அருமையான பூமி.

பள்ளிவாசல் திறப்பு விழாவிலும், பேராலய விசேடங்களிலும், கோவில் விசேடங்களிலும் பல அன்ன தானங்கள் நடைபெற்று அதில் அனைத்து சமயத்தினரும் சமபந்தி விருந்துண்ட வியப்புமிகு பூமி.

மக்களுக்கு மருத்துவ சிகிச்சை செய்வதற்காக, மருதுபாண்டியர் காலத்திலேயே கிறிஸ்தவ சமயத்தவருக்கு இடத்தினை இனாமாக அளித்த

### ராமானுஜத்திற்கு மரியாதை

இந்தியாவில் ஒரு ராமானுஜம், ஆன்மிகத் துறைக்கு சேவை செய்தார். மற்றொரு ராமானுஜம் கணிதத் துறைக்குப் பல பங்களிப்புகளைச் செய்தார். அவர் பெயரால் ஓர் ஆன்லைன் மியூசியம் www.ramanujanmuseum.org என்ற வெப்சைட் உள்ளது. அறிவியலுக்கு உள்ளது போன்றே கணித ஆய்வுக்கூடம், சிக்கலான கணிதத்துக்கு மிக எளிய தீர்வுகள், கணித ஆய்வுகளின் லேட்டஸ்ட் முடிவுகள் இதில் உள்ளன.

மஸ்தான் சாயபு தர்காவில் மதுரை ஆதீனம் தியானம் செய்யும் காட்சியை அரிதாகக் காணக்கூடிய கண்ணிய பூமி.

சமஸ்கான் பள்ளிவாசல் தர்கா சந்தனக்கூடு விழாவில் சமயம் சாராது நன்கொடை அளித்து நிகழ்ச்சிகளிலும் பங்கேற்கும் நூதன பூமி.

நோன்புக் காலங்களில் நோன்புக் கஞ்சி காய்ச்சுவதற்கா நன்கொடையினைச் சமயம் சாராது வழங்கும் சரித்திர பூமி.

எந்த ஒரு பண்டிகையாயினும், சமயம் சாராது விருந்தோம்பல் செய்யும் விசித்திர பூமி.

மாலை வேளைகளில் மசூதிகளின் வாசல்களில் மாற்றுச் சமயத்தைச் சேர்ந்த மழலைகளுக்கு நோய் நிவாரண மந்திரம் சொல்லும் மகத்தான பூமி.

சைவ சித்தாந்தம் படித்து முதுகலை பட்டம் பெற்ற இஸ்லாமிய சமயச் சொற்பொழிவாளர் ஏ.கே.எம். லெப்பைக் கனியும், இந்து சமய சொற்பொழிவாளர் குரு. மகனார் சன்னிதானம் குன்றக்குடி அடிகளாரும் நண்பர்களாய்ப் பழகிவரும் நற்பூமி.

மத நல்லிணக்கத்திற்கும், மனித நேயத்திற்கும் முன்மாதிரியாகத் திகமும் முத்தான பூமி.

ஆதிபைரவரின் ஆலய கும்பாபிகேஷம்மூலம் சரித்திரம் மிக்க இந்த சகோதரத்துவம் மேலும் வளர்ந்து செழிக்கட்டும்.

## ஆலயங்களில் அமைதி காப்போம்!

பொதுவாக ஆலயங்களுக்குச் செல்வதே மன நிம்மதி பெற வேண்டியே. அங்கு மனஒருமை வேண்டி கண்களை மூடி இறைவனை நினைத்து தியானம் செய்வதால் மனத்தில் அமைதி உண்டாகிறது.

ஆனால் ஆலயத்தில் வீட்டுக் கதைகளை பேசியும், வேண்டாத சச்சரவுகளை உருவாக்காமலும் இருத்தல் வேண்டும்.

ஆலயச் சுவர்களில் கிறுக்குவதை பள்ளி மாணவர்கள் இப்போது வழக்கமாகக் கொண்டுள்ளனர். தேர்வில் வெற்றி பெறுவதற்காகத் தங்கள் தேர்வு எண்ணை ஆலயத்தின் சுவர்களில் எழுதி வேண்டிக் கொள்ளும் பழக்கம் இப்போது உருவாகிவிட்டது. மாணவர்களிடம் இதுபோன்ற மூடநம்பிக்கை உருவாகக் கூடாது.

தேர்வில் நல்லமுறையில் படித்தால் மட்டுமே தேர்ச்சி பெறமுடியுமே தவிர, இப்படி ஆலயச் சுவர்களில் எழுதி வேண்டிக் கொள்வதால் தேர்ச்சி பெற முடியாது.

ஆலயத்தில் தூய்மையை கடைப்பிடிக்க வேண்டும். எண்ணெய்யைத் தடவி சுவற்றில் தேய்த்து அழுக்காக்குவதையும், பாதைகளில் குப்பைகளைப் போடுவதையும் தவிர்க்க வேண்டும்.

மேலும், ஆலயங்களுக்கு வரும்போது பிறரது கண்ணை உறுத்தும் வகையில் அதிக நகைகளை அணிந்து கொண்டு வருவதைத் தவிர்த்தால் நல்லது.

**- ஈஸ்வரி குமரன்,** திருப்புத்தூர்

# சுவாமி பெயருக்கு அர்ச்சனை செய்யலாமா?

◻ஆன்மிக அடியான்



சிலர் கோயிலுக்கு வந்தால் தங்கள் பெயர், நட்சத்திரம், ராசி, கோத்திரம் சொல்லி அர்ச்சனை செய்கின்றனர்.

இவை தெரியாத சிலர், சுவாமி பெயருக்குச் செய்யுங்கள் என்கின்றனர். இதில் எது சரியான முறை தெரியுமா?

எந்தச் செயலைத் தொடங்கினாலும், இறைவன் திருவருளை முன்னிட்டு இன்ன நன்மைக்காக, இன்னாருடைய விருப்பத்தின் பொருட்டு, இதைத் தொடங்குகிறேன் என்று இறைவனிடம் விண்ணப்பிப்பதே அர்ச்சனையின் நோக்கம்.

இதையே சங்கற்பம் செய்து கொள்ளுதல் என்கிறார்கள்.

ஆகவே, நமது பெயருக்குத்தான் அர்ச்சனை செய்து கொள்ளவேண்டும். இதுதான் முறை என்கிறார்கள் பெரியோர்கள்.

# சொர்க்கம் என்றால் என்ன?

ஒரு நாள் மாணவன், "குருவே! சொர்க்கம் என்றால் என்ன? நரகம் என்றால் என்ன?" என்று கேட்டான்.

"செல்லுகிறேன். என்னுடன் வாருங்கள்!" என்று முனிவர் மாணவர்களை அழைத்துக் கொண்டு போனார்.



வீட்டுக்குள் ஒரு கணவன் மனைவி இருந்தார்கள். கணவன் லொக்... லொக் ... என்று இருமிக் கொண்டிருந்தார்.

"வைத்தியரிடம் போய்ப் பாருங்கள்" என்று மனைவி சொன்னாள். "அதெல்லாம் எதுக்கு? வெந்நீர் வைத்து எடுத்து வா குடித்தால் சரியாகப் போகும்" என்றான் கணவன். மனைவி சுக்குக் கசாயம் வைத்து எடுத்து வந்தாள். "பார்த்தீர்களா? இது தான் சொர்க்கம்" என்றார், முனிவர்.

பிறகு மாணவர்களை அழைத்துக் கொண்டு அடுத்த தெருவுக்குப் போனார். அங்கு ஒரு கணவன், மனைவி இருந்தார்கள். கணவன் இருமிக் கொண்டிருந்தான். "அவர் நோய் எனக்குப் பரவி விடும் போலிருக்கிறதே?" மனைவி முகத்தைத் திருப்பிக் கொண்டாள். "கொஞ்சம் வெந்நீர் வைத்து எடுத்து வாயேன்.!"

"ஏன் என் உயிரை வாங்குறீங்க? வைத்தியரை போய் பாருங்கள்!" என்று மனைவி சிடுசிடுத்தாள்.

"உம்..... நடக்க முடியாமல் தானே உன்னிடம் கேட்கிறேன்" என்றான் கணவன். மனைவி முணுமுணுத்தாள். முனிவர் மாணவர்களிடம், இதுதான் நரகம் என்று விளக்கினார்.

# யோக வைரவ மாலை



1. மஹாக்ரது ப்ரயாக்னி குண்ட ஜாத மூர்த்திகம்!
மஹாகனாஸ காசி ப்ரூமிபாலக மஹாபலம்!!
மஹாபாதஸ்ஸமஸ்த தேவ மானுான் ஸமுத்தரம்!
மஹா ஆபதுத்ரக்யகம் நமாமி யோக வைரவம்!!
2. ஸ்வயம் க்ருதாட்டஹாஸ பூரிதாண்ட ஸம்ததிம்!
ஸ்வயம் த்ருதாம் சுகண்ட ஜாந்ஹவி மஹாநதிம்!!
ஸ்வயம் கரே த்ருத த்ரிசூலகம் கபால தாரிணம்!
ஸ்வயம் கராள ரௌத்ரகம் நமாமி யோக வைரவம்!!
3. கடோர தண்ட தாடநாதி தண்ட ஹஸ்த: தைத்ய ஸம்க ஸுதநம்!
கடோரதண்ட வஹ்னி ஸோம ஸுர்ய லோசநாந்விதம்!!
கடோரசாசனம் ஸமஸ்த திவ்ய சங்க ஸேவிதம்!
கடோர தண்ட ஹஸ்தகம் நமாமி யோக வைரவம்!!
4. பயங்கரத்வநி ப்ரகல்ப கர்ண நாத பீகரம்!
பயங்கராதி பார சூல கட்க கேட தாரிணம்!!
பயங்கர ப்ரசண்ட யுத்த சத்ரு சங் மாரிணம்!
பயங்கராதி பைரவ: ஸமஸ்புரத்ருதீய சந்த்ர ரேகி காவி தம்ஸ்ட்கரம்
நமஸ்த தைவதம் வரும் நமாமி யோக வைரவம்!!.
5. சுபாசுபாத்யேநே கர்மி பக்த வர்க ரக்ஷகம்!
சுபார்த்த தர்ம காம்ய மோக்ஷ தாயக க்ருபாநிதம்!!
ஸ்வபாசி கல்பி ப்ரபஞ்ச கோடி கோடி ஸ்ருஷ்டிகம்!
ஸ்வபாவ பத்ம ஜேஸ்வரம் நமாமி யோக பைரவம்!!
6. பாதாரவிந்த தர்சன அநோக பாப நாசனம்!
சுதாம பக்தி பூஜிந அநேக பாக்ய தாயகம்!!
சதா ஸ்ரீஸ்தளி தடே ப்ரஸன்ன யோக பீடகம்!
முதாத்ர ஏசினி குரும் நமாமி யோக பைரவம்!!
7. யோகி ஸ்வபக்ஷ மந்த்ர யந்த்ர தந்த்ர ஸித்தி தாயகம்!
ப்ரபு:ஸ்வபக்ஷி மந்த்ர யந்தர தந்த்ர போதிநம்!!
ஸுதாரணம் ஸ்வபக்ஷ தக்ஷ பாஹுமூல யோக தண்ட தாரிணம்!
க்ருபாக்ஷ பூர்ண யோசினம் நமாமி யோக பைரவம்!!

சுபமஸ்து.

# கொடிமரம்

மனித உடலில் முதுகெலும்பின் செயல்பாட்டினை விளக்குவது திருக்கோயிலின் கொடிமரம்.

கொடிமரம் மனிதனுடைய முதுகுத் தண்டிற்கு ஒப்பானதாக விளங்குகிறது. கொடிமரத்தில் இருக்கும் ஒவ்வொரு அடுக்கும் அல்லது தட்டும் மனிதனின் முதுகிலுள்ள இணைப்பைக் குறிப்பிடுகின்றன.

கொடிமரத்திலுள்ள உச்சிப் பகுதியில் அமைந்திருக்கின்ற மூன்று நிலைகள் மனிதனின் மூவித மூளைகளைப் பற்றி விளக்குகின்றன. அவை பெருமூளை, மத்திய மூளை, கீழ் மூளை ஆகியவை.

கொடி மரத்தின் முதல் நிலை பெருமூளையின் முன் பகுதி.

பேச்சினை இயக்குவது. இதன் ஒத்துழைப்போடு எண்ணங்கள், உணர்ச்சி மற்றும் செயல் திறனை கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் இடமாக இப்பகுதி காணப்படுகின்றது.

மேற்பகுதி - உடலியல் உணர்வாகிய அறிதல், தொடுதல், அழுத்தம், தட்ப வெப்பம் மற்றும் வலிமையை அறிந்த பின பொருள் மாற்றம் செய்யும் இடமாக அமைகின்றது.



பக்கப் பகுதி- ஒலியை நினைவு கூர்தல். இதன் நாதமும் ஓசையின் வேகமும் இப்பகுதியில் இடம்பெறுகின்றன. இப்பகுதியில் அமைந்திருக்கும் பிளவு நினைவுகளைச் சேமிக்கும் கிடங்காக முக்கியப் பங்காற்றுகின்றது.

பின் பகுதி - இவ்விடம் கண்டுபிடித்தல் மற்றும் காணும் காட்சியைப் பொருள் மாற்றம் அல்லது விளக்கம் செய்வது.

கொடிமரத்தின் நடுநிலை மத்திய மூளையைக் குறிக்கின்றது.

மத்திய மூளையின் ஆளுமை புற நடவடிக்கையுடனும் இதன் எல்லை வட்டாரத் தொடர்புடைய உறுப்புகளின் வெளியுறையுடனும் தகவல் தொடர்பு நிலையத்துடனும் இணைகின்றது.

**கொடிமரத்தின் கீழ்நிலை**

கொடி மரத்தின் கீழ் நிலை இரண்டாவது பெருமூளை எனும் கீழ் மூளையைக் குறிக்கின்றது. இதன் நரம்புத் தொடர்புகள் மூளையின் மற்ற வட்டார இணைப்புடன் இணைகின்றது. முதுகு தண்டின் நரம்பு கற்றை எளிதாக வழவழப்புடனும் துல்லியதமாக இயங்குவதற்கு சமநிலைக் கட்டுப்பாட்டில் அமைந்திருக்கும்.

**கொடி மரத்தின் கயிறு:**

திருவிழாக் காலங்களில் கொடிமரத்தின் கயிறு உச்சி ஏறி தொடுவதைப் போல அமைந்திருக்குமானது உடலிலுள்ள நரம்புக் கற்றைகள் அனைத்தும் முதுகுத் தண்டு வழியாகச் செல்வதுபோல் உள் மற்றும் வெளி உணர்வுகளின் செயல்பாட்டின் தொடர்புகளை மூளைக்கு அனுப்பி வைக்கும் செயலை கொடிமரத்தில் காண்பிக்கப்படுகின்றன.

நரம்புக் கற்றைகள் அனைத்தும் உடலில் பல பாகங்களுக்கு இணைக்கப்பட்டு நரம்பு வழியாக தகவல் தொடர்பினைப் பெற்று இதன் வாயிலாக உள் மற்றும் புற சூழ்நிலைக்கேற்றவாறு மூளைக்கு தகவல் அனுப்புவதும் பெறுவதுமாக அமைகின்றது.

-ஈப்போ மருதையா

# திருப்புத்தூர் திருத்தளிநாதர் கோயிலில் உள்ள கல்வெட்டு:

1. ஸ்வதிஸ்திபர் கோமாநபன்மரான த்ரிபுவன சக்ரவர்த்திகள் சோணாடு கொண்டு முடி
2. கொண்ட சோழபுரத்து வீராபிகேமும் பண்ணியருளிய
3. சுந்தர பாண்டிய தேவற்கு - மேநாயற்று முதற்தியதி நாள்
4. வளநாட்டு இராசிங்க
5. தான்ம் அம்பலத்தாடி ந
6. தேவர் கேரள சிங்க வளநாட்டு ப்ரஹ்ம
7. தேயம் திருப்புத்தூர் உடையார் திருத்தளியாண்ட நாயனார் பெரிய திருக்கோபுரத்து
8. க்கு வடக்காக விலை கொண்டெடுத்த காமபாடு தோறுமை யாளறத்துக்கு வேண்
9. டும் பரிசாக .... கெண்ணைக்கு
10. --
11. -- திருத்தியூர் முட்ட...
12. --- நான் கெல்லைக்குட்பட்ட--- புன் செய்யும் குளமும் --
13. -- எப்பேர்ப்பட்ட --- நம்முடைய செம்பாதி --- றையிலி
14. க் காராண் கிழமையாகக --- தேவர் பக்கல் --- பொருளு
15. ங் கொண்டு இப்படி சந்த்ராதித்யவற் செல்வதாகக் கல்வெட்டிக் குடுத்தேன் கண்டன் உதையஞ் செ
16. ய்தானான காங்கேயனேன் இப்படிக்கு காங்கேயனெ முத்து இப்படி நியமத்து திருப்பெருந்
17. துறை உடையானான வாணாதராஜன் எழுத்து இப்படிக்குக் திருக்கோட்டியூர் உய்யவந்தாந்.
18. உய்யவந்தானான உதய திவாகர மூவேந்த வேளானெழுத்து



கல்வெட்டுக்கள் படி எடுத்தவர்: **டாக்டர். இரா. கலைக்கோவன்**
கலைக்காவிரி, திருச்சி.

# ஏழைக்கு உதவினா இறைவனுக்கு உதவின மாதிரி...

தோழி

ஒரு மகாராஜா வருடந்தோறும் வெங்கடேசருக்கு ஆயிரம் பொற்காசுகளை உண்டியலில் போடுவது வழக்கம். ஒருமுறை, சுகவீனம் காரணமாக அவரால் ஆலயம் செல்ல முடியவில்லை, ஆகவே, தமது அமைச்சரை அழைத்து ஆயிரம் பொற்காசுகளை அவரிடம் தந்து திருப்பதி வெங்கடேசர் கோயில் உண்டியலில் செலுத்திவிட்டு வருமாறு அனுப்பினார்.

கோயில் அருகில் இருந்த காரணத்தினால் அமைச்சர் கால் நடையாகச் சென்றால். அமைச்சர் போகும் வழியில் பிச்சைக்காரர்கள் பலர் கை நீட்டினர். அவர்களுக்கும் கொடுத்துக் கொண்டே கோயிலை நோக்கிச் சென்றார். உணவுப் பற்றாக்குறையால் உடல் மெலிந்து நின்ற நாய்கள் சில இவரைப் பார்த்து வால் ஆட்டின. கருணையுள்ளம் கொண்ட அமைச்சர் நாய்களுக்கும் உணவு வாங்கிக் கொடுத்தார். கடைசியில் உண்டியலுக்குப் போடுவதற்கு நூறு பொற்காசுகள் மட்டுமே எஞ்சியிருந்தன. அந்த 100 பொற்காசுகளையும் உண்டியலில் போட்டுவிட்டு அரண்மனை திரும்பினார் அமைச்சர்.



மன்னர் அவரை அழைத்து ஆயிரம் பொற்காசுகளை உண்டியலுக்குள் போட்டாகிவிட்டதா என்று வினவினார்.

அமைச்சர் நடந்தவற்றைக் கூறி 100 பொற்காசுகளை மட்டுமே உண்டியலில் சேர்த்ததாகச் சொன்னார். 1000 பொற்காசுகளையும் உண்டியலில் போடாததற்கு அமைச்சரை மன்னர் திட்டித் தீர்த்தார். ஒருவேளை அமைச்சர் 900 பொற்காசுகளையும் எடுத்துவிட்டு இப்படிக் கதை அளக்கிறாரோ என்று சந்தேகத்துடனே அன்று இரவு உறங்கினார்.

அன்று இரவு கனவில் வந்த திருப்பதி வெங்கடேசர், நீ கொடுத்தனுப்பிய 900 பொற்காசும் எனக்குக் கிடைத்தது. என்று கூறி மறைந்தார். மறுநாள் காலை மனம் தெளிந்த மன்னர், அமைச்சரை அழைத்து புன்முறுவல் பூத்தார். அதன் பிறகு போகும் வழியில் இருக்கும் ஏழைகளுக்கு தான தருமம் வழங்கி, மீதியையே உண்டியலில் செலுத்தினார்.

இல்லாதோர்க்கு கொடுப்பதே இறைவனுக்குக் கொடுத்ததாகும்.

# வேம்பு மரம் வீட்டுக்கருகில் வேண்டுமா?

டாக்டர் வெங்கானூர் பாலகிருஷ்ணன்



இக்காலத்து அலங்காரத் தாவரங்கள் வீட்டு முற்றத்திலும், வீட்டுக்குள்ளும், மொட்டை மாடியிலும் நட்டு வளர்த்து பராமரித்து வரும் அவசர வாழ்க்கையில், வீட்டு முற்றத்தில் வேம்பு மரம் நின்றாலும் அதை வெட்டி விடும் காட்சிகளையே நாம் காண்கின்றோம். முற்காலத்திலோ, வீட்டு முற்றத்தில் அல்லது கொல்லைப் புறத்தில் வேம்பு நட்டு பராமரிப்பதில் மிக அதிக ஆர்வம் கொண்டிருந்தனர். அம்மரத்தில் தெய்வீக சக்தி இருப்பதாக நம்பியிருந்தனர். ஆனால், வேம்பின் நற்குணங்களை அயல்நாட்டினர் கண்டுபிடித்து நமக்கு எடுத்துரைத்தனர்.



வேம்பின் மருத்துவ குணங்களைக் கண்டறிந்த அயல்நாட்டினர் அதன் தனி உரிமையையும் (Patent Right) வைத்துக் கொண்டனர் என்பது நாம் அறிந்துள்ளோம். அபூர்வ மருந்துக்களின் பட்டியலில் இது இடம்பெறுகின்றது. வீட்டுக்கருகில் நிற்கும் வேம்பின் இலைகளைத் தழுவி வரும் காற்றில் நோயணுக்களை அழிக்கும் சக்தி உண்டென்று நாம் கண்டறிந்துள்ளோம். இன்றும் பொக்கன், சின்னம்மை, விளையாட்டம்மை போன்ற நோய்களுக்கு வேப்பிலையால் உடல் முழுதும் தடவுகின்றோம். வேப்பிலைச் சேர்த்து காய்ச்சிய எண்ணெய் சொறி, சிரங்கு போன்ற சரும நோய்களுக்கு மிக உத்தமம் என்று ஆயுர்வேதம் கூறுகின்றது. வேம்பின் பயன்களை மொத்தமாக அயல்நாட்டினரின் ஆதிக்கத்து உள்ளாவதற்குமுன் நம் இளைய தலைமுறை விழித்துக் கொண்டு வேம்பை பராமரிக்கும் காலம் வரவேண்டும்.

## மூடநம்பிக்கை வேண்டாமே!

மூட நம்பிக்கைகளை அறவே விட்டொழித்து இறைவன் ஒருவனே என்ற நிலையில் வாழவேண்டும். எந்தவித முயற்சியும் செய்யாமல் இறைவனை வழிபட்டால் காரியம் நிறைவேறும் என்று எண்ணுபவர்கள் அந்த நினைப்பை முதலில் கைவிட வேண்டும். நேர்மையாக, உண்மையாக, உழைக்கும் மக்களுக்கே இறைவன் அருள்புரிவான் என்பதை நம்புவோமாக!

# சித்தர்கள் மலையில் தவம் செய்வது ஏன்?

ஞானவெட்டியான், திண்டுக்கல்





நமது புராணங்களும், வேதங்களும் கைலாய மலையை சிவனின் வாசஸ்தலமாக சொல்கிறது. அதேபோன்றே திருமாலின் அம்சமாக திருமலை கருதப்படுகிறது.

திருவண்ணாமலைகூட அல்ல. அந்த ஊரில் உள்ள ஒவ்வொரு துளி மண்ணும் சிலலிங்கமாக மதிக்கப்படுகிறது.

ஒரு வைணவ பெரியவர் கால்களால் மிதிக்காமல் முழங்காலிட்டே திருமலை ஏறியுள்ளார்.

காரைக்கால் அம்மையாரும் தலையால் ஊர்ந்தே கைலாச மலையை அடைந்துள்ளார்.

திருநாவுக்கரசரும் திருவண்ணாமலையை கால்களால் தீண்டுவது பெரும பாவம் என அரகண்டநல்லூர் அதுல்யா நாதேஸ்வர் ஆலயத்திலிருந்தே அண்ணாமலையைத் தரிசித்துள்ளார்.

அன்னை ஆதிபராசக்திக்கு விந்தியா சல நிவாசினி என்று ஒரு பெயர் உள்ளது.

அதன் பொருள் என்னவென்றால் விந்திய மலையில் வாசம் புரிபவள் என்பதாகும்.

உச்சிப் பிள்ளையாரும், ஐயப்பனும் மலையிலேயே இருக்கிறார்கள்.

குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடம் என வழிபடப்படுகிறது.

பாரம்பரியமான சந்நியாசிகளின் ஒரு பிரிவினருக்கு கிரி என்ற மலைப் பெயரே சந்நியாச நாமமாகக் கொடுக்கப்படுகிறது.

இவை எல்லாம் இந்து பாரம்பரியத்தில் மலைக்குக் கொடுக்கும் முக்கியத்துவமாகும்.

ஏசுநாதர்கூட கொல்கொதா மலையில்தான் முதல் பிரசங்கத்தைத் துவங்கினார். கல்வாரி மலையில்தான் சிலுவையில் அறையப்பட்டார்.

ஆகவே, மலைகளுக்கும் ஆன்மிக உணர்விற்கும் மிக நெருக்கமான உறவு உலகம் முழுவதும் இருந்து வருகிறது.

அதற்குக் காரணம் என்ன? மலைகள் மனிதனால் அதிகமாக சஞ்சாரம் செய்யாத பகுதியாகும்.

மனித மனத்திலிருந்து உற்பத்தியாகும் பல வகையாபன எண்ண அலைகள் மலைப் பகுதிகளில் குறைவாகவே இருக்கும்.

இதனால் தவம் புரிவதற்கும், தியானம் செய்வதற்கும் மலைகள் பேருதவிபுரிகின்றன. இதனாலேயே கடவுள் அம்சமாக மலை கருதப்படுகிறது.